

# ஸப்தகிரி

விலை ரூ. 1/-

ஏப்ரல், 1987



திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



வென்றிசே ரிலங்கையானை வென்ற மால்வீர மோத
நின்ற ராமாயணத்தில் நிகழ்ந்திடு கதைகள் தம்மில்
ஒன்றினைப் படித்தோர்தாமும் உரைத்திடக் கேட்டோர் தாமும்
நன்றிது வென்றோர்தாமும் நரகம தெய்திடாரே!

வெற்றிகள் பல கொண்ட இலங்கை வேந்தனை இராவணனை வென்றொழித்த திருமாலான இராமபிரானுடைய வீரச் செயல்களைச் சொல்வதற்கு அமைந்த ஸ்ரீ ராமாயண மஹா காவியத்தில் உலாவுகின்ற கதைகளுக்குள்ளே ஏதேனுமொரு கதையை தாமாகப் படித்தவர்களும், ஒருவர் எடுத்துரைக்கக் கேட்டவர்களும், பாராயணமோ ச்ரவணமோ செய்யாமற் போனாலும் 'ராமாயணக்கதை சிறந்தது' என்று கொண்டாடுபவர்களும் நரகம் செல்ல மாட்டார்கள்.

— கம்பராமாயணக் காப்புச் செய்யுள்—8.

ஏப்ரல், 1987

தனிப்பிரதி ரூ 1 | மலர் 17

வருடச் சந்தா ரூ. 12 | இதழ் 11

## உள்ளுறை

| | பக்கம் |
|---|---|
| கிருத்திவாஸ இராமாயணம் ... | 5 |
| கம்பனின் வர்ணனைத் திறன் ... | 9 |
| மணப்பெண்ணின் தலையில் நுகத்தடி வைப்பதேன் ... | 13 |
| புருஷாகாரம் ... | 14 |
| தாரமங்கலம் சிறப்பு ... | 15 |
| வள்ளலார் போற்றும் ஸ்ரீராம வள்ளல் ... | 17 |
| கருத்து மாறிய பழமொழிகள் ... | 19 |
| சத்திய சோதனை ... | 21 |
| த்வயத்தின் பொருள் சுருக்கம் ... | 29 |
| ஆகமத்தில் ஸ்நபனம் - உதக திரவியம் ... | 41 |
| திருமலையில் வருடப் பிறப்பு ... | 43 |

### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : ஸ்ரீ கோதண்டராமர்: சித்திரம்—ஜெகதீஷ்.

2-வது : திருவரங்கம் ஸ்ரீ ரங்கநாதசுவாமி கோயில் உற்சவர்.

3-வது : அண்மையில் கட்டி முடிக்கப்பட்டத் திரு வரங்கக்கோயிலின் தெற்கு ராஜ கோபுரம்.

2-3வது போட்டோ : கே. பிச்சுமணி ஐயங்கார்—திருவரங்கம்.

பின்னட்டையில் : திருமலைத் தெப்போற்சவத்தில் ஸ்ரீசீதா ராம லக்ஷ்மணர்.

*சிறப்பாசிரியர்*
**திரு. எஸ். லக்ஷ்மிநாராயணு I.A.S.,**
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*அச்சிடுபவர்.*
**திரு. எம். விஜயகுமார் ரெட்டி,**
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

*ஆசிரியர் :*
**திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.**

*துணையாசிரியர்:*
**திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,**

**பிரதிகளுக்கு:**
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

நாடு முன்னேறுகிறது, சமுதாயம் மேம்படுகிறது என்று கூறினுல் அதன் பொருள் அந்நாட்டின், அச்சமுதாயத்தின் ஓர் அங்கமான தனிமனிதனின் உழைப்பும், மனப்பான்மையும் சிறந்தோங்கியுள்ளது என்பதேயாம். விஞ்ஞானத்தின் உதவியால் அவன் உழைப்பு சிறந்தோங்கினுலும், அதன் பலன் ஆக்கப் பூர்வமான பணிகளுக்குப் பயன்படும்போது தான் அவனுக்கும் அவன் உழைப்புக்கும் உயர்வாகும். அப்போதுதான் அச்சமுதாயமும், அதனைச் சார்ந்துள்ள தனி மனிதனும் அமைதியுடன் வாழ முடியும். ஆகவே தனிமனிதனின் அறிவும் உள்ளமும் எத்துணை சிறப்பானது-பெருமையுடையது-ஆற்றலுள்ளது என்பது நன்கு தெரியவரும்.

இத்தகு தனிமனிதன் மற்றும் அவன் மேன்மையைக் கருத்திற்கொண்டும் அவன்மூலம் இம்மானிட சமுதாயம் மாண்புறும் வகையில் அவன் கடைப்பிடிக்க வேண்டிய கடமைகள், பின்பற்ற வேண்டிய கொள்கைகள், வளர்த்துக் கொள்ள வேண்டிய பண்புகள் யாவையும் கொண்டு, பழமைக்கும் பழமையாய் புதுமைக்கும் புதுமையாய் சீரிளமை கொண்டு இந்து சமயம் எனும் பெரும் ஆலமரம் காலம்காலமாக கிளைச்சமயங்களெனும் பல விழுதுகளுடன் விளங்கி வருகின்றது. இப்பழமைமிகு இந்து சமயம், வழிபடுதற்கு என்று ஓர் இடம், வழிபடுதற்குரியவன் என்று ஒருவன், வழிபடுதற்கு என்று ஒரு காலம் என்று எப்படி தன்னைத் தானே ஒரு நியதிக்குள்ளாக்கிக்கொள்ளவில்லையோ, அது தனக்கென்று, தன் பெருமை பேச ஒரு மத நூல் என்றும் வைத்துக்கொள்ளவில்லை. அன்று தோன்றிய வேதமும் அதனை அடிப்படையாகக் கொண்டு இன்று வரை மலர்ந்து கொண்டு வரும் பக்தி இலக்கியங்கள் யாவுமே இந்து சமயத்தின் பெருமை கூறும் மத நூல்களேயாம். வேதங்களில் தெரிவிக்கப்பட்டிருக்கும் கருத்துக்களே புராணங்களில் அலசப்பட்டிருக்கும்; இதிஹாஸங்களில் தெளியப்பட்டிருக்கும். வேதக் கருத்துக்கள் யாவும் ஓர் அரசனின் ஆணை போன்றன. அவ்ஆணைக்கு எதிராக ஏன், எதற்கு என்று எப்படிக் கேட்க முடியாதோ, வேதக் கருத்துக்களும், விளக்கங்களும், சந்தேகங்களுக்கு அப்பாற்பட்டவை. வேதங்களைத் தொடர்ந்து எழுந்த புராணங்களில் கூறப்பட்டிருக்கும் கருத்துக்கள் ஒருவன் தன் நண்பனுக்குக் கூறும் அறிவுரைகள் போன்றனவாகும். அவற்றில் பல ஏற்கக் கூடியனவாகவோ,தள்ளக் கூடியனவாகவோ ஏன் குழப்பக் கூடியனவாகவோ இருக்கலாம்.அடுத்தது இதிஹாஸங்கள். இதில் வரும் கருத்துக்கள், கணவன் மனைவிக்குள் நடக்கும் கருத்துப் பரிமாற்றங்களாக அமையும். இதில் ஆணையும், அறிவுரையும் காதல் எனும் பல நிலைகளில் தோய்த்துத் தரப்படுகின்றன.ஆதலால்தான் வேதங்களையும், புராணங்களையும்விட இதிஹாஸங்களான மகா பாரதமும், இராமாயணமும் அதிக செல்வாக்குடன் விளங்குகின்றன. இதில் மகாபாரதத்தைவிட, படிக்கும்போதே படிப்போரை நெகிழவைத்து, சிந்திக்க வைத்து, தன்னுள் ஐக்கியமாக்கிவிடும் இராமாயணம் தனிச் சிறப்புடையது. ஆகையினுல்தான் வால்மீகியைத் தொடர்ந்து அவனது காவியம் பலமொழிகளில், பல நாடுகளில் உருவெடுத்து, இராமனின் பெருமை பாரில் பலரால் பரவலாகப் பேசப்படுகின்றது.

இராமகாதையின் ஆரம்பமே ஒரு செய்தியுடன்தான் ஆரம்பமாகியுள்ளது. ஒருவன் எவ்வளவுதான் கடின மனமும், தீய பண்புகளின் இருப்பிடமாகவும் திகழ்ந்தாலும்,அவனுள்ளும் ஒரு மூலையில் ஒரு மனிதப்பண்பு உறங்கிக் கொண்டுதான் இருக்கின்றது. அது விழித்துக் கொண்டதேயானுல் அவனுல் ஒரு சரித்திரமே படைக்க முடியும். ஆம். வால்மீகி கொள்ளைக்காரனுகவும்,கொலைகாரனுகவும்,இழி குலத்தவனுகவும் அழைக்கப்பட்டாலும், ஒரு கிரௌஞ்சப் பறவையின் துயரத்தைக் கண்டதும், அவனுள் இருந்த இரக்கக் குணம் விழித்துக் கொண்டது. அவனைச் சிந்திக்க வைத்தது. அவன் உள்ளம் புனிதமானது. அவன் நா இராமன் புகழ் பாடத் துவங்கியது. அவன் கை ஒரு காவியம் படைத்தது.

இவ்ராமகாவியம் தாய், தந்தை, கணவன், மனைவி, சகோதரன், நண்பன் என்று பல பெயர்களில் குடும்பத்தில் உலாவரும் எல்லா உறவுகளுக்கும் வாழ்க்கை நியதிகளைக் கற்றுத்தரும் ஒரு வாழ்க்கை இலக்கியமாகத் திகழ்கின்றது. இக்காவியத்தில் காணப்படும் இலக்கிய சுவையைவிட, வாழ்க்கை நெறிகளை விளக்கும் முகமாகவே உரையாடல்களும், நிகழ்ச்சிகளும், கதைகளும் பின்னிப்பிணைந்து அமைந்துள்ளன. 'ஆயிரம் முட்டாள் அமைச்சர்களைக் கொண்டு நாடாள்வதைக் காட்டிலும், ஒரே ஒரு படித்த, மதி நுட்பம் கொண்ட அமைச்சனே ஒரு அரசனுக்குத் தேவை' என்று அயோத்யா காண்டத்தில் இராமன் பரதனுக்குக் கூறுவதும், 'பொருள்மீது ஆசையில்லாது தகுந்த அறிவுரைகளை உனக்கு உன் அமைச்சர்கள் வழங்குகின்றுர்களா' என்று இராமன் பரதனைக் கேட்பதும், ஆரண்ய காண்டத்தில் 'உனக்குத் தவருன வழிகளைக் காண்பித்த. உன்னைத்திருத்தத்தவறிய உன் அமைச்சர்களை ஏன் இன்னும் கழுவிலேற்றவில்லை' என்று மாரீசன் இராவணனனைக் கேட்பதும் இன்றைய அரசியலார்க்குத் தேவையான விஷயங்களாகும். இராமனைக் காட்டிற்கு அனுப்பியதில் பரதனுக்கும் பங்குண்டோ என்று கௌசல்யை சந்தேகிக்க, அது கேட்டு பரதன் நாவிலிருந்து பீறிட்டு வரும் சொற்களில் அமைந்திருப்பன, இவ்வுலகில் மானிட சமுதாயம் ஒரு போதும் செய்யக்கூடாத செய்கைகளின் மொத்த சமுகக் கட்டளைகளாகும். சித்திர கூடத்தில் இராமன் பரதனைப் பார்த்து 'அதிக தூக்கத்தைத் தவிர்க்கின்றுயா? குறித்த நேரத்தில் துயிலெழுகின்றுயா, பெண்களுக்குத் தகுந்த பாதுகாப்புத் தரப்படுகின்றதா, வரவுக்குள் செலவு அமைந்துள்ளதா' என்று கேட்பன, இன்றைய இளைஞர் சமுதாயத்திற்குத் தேவையான அறவுரைகள். நட்பிற்குக் குலம் ஒரு தடையாகாது என்பதைக் குகனை ஒரு சகோதரனுக இராமன் ஏற்றுக்கொளலும், ஒருவனின் மேன்மை உடலழகால் அல்ல, உள்ளத்தின் உயர்வால்தான் பெறப்படுகின்றது என்பதை அனுமனை தன் அன்புக்குரியவனுக இராமன் ஏற்றுக் கொளலும், இன்றைய சமுதாயத்திற்குத் தேவையான பாடங்களாகும். பாசத்திற்கு பரதனும், தொண்டுக்கு அனுமனும்,குகனும்,இலக்குமணனும்,காதலுக்கு சீதையும் எல்லாவற்றிற்கும் மேலாகக் கடமைக்கும்,வீரத்திற்கும், அருட்திறத்திற்கும் இராமனும் என்று கூறும்படி உலாவரும் இராமாயண காவிய நாயகர்கள் போன்றோர் நம்மிடையேயும் நடமாடினுல், நாட்டில் பாலும் தேனும் ஓடாவிட்டாலும், இப்பாரத மண்ணில் இரத்தக் கறையும், வெடிச்சத்தமும் இல்லாதிருக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# அரங்கனுக்கு ஓர் அணிகலன்

திருமதி. உமாராம்,
*திருப்பதி*

ஸ்ரீராமபிரான் விபீஷணனுக்கு ஸ்ரீ ரங்கநாதர் விக்ரகம் ஒன்றினை வழங்க,அதனை இலங்கைக்கு எடுத்துச் செல்ல விபீஷணனும் தன் பயணத்தை மேற்கொண்டான். போகும் வழியில் திருவரங்கத்தில் ஓர் இடத்தில் அவ்விக்ரகத்தை வைத்துவிட்டு, சற்றேஇளைப்பாறித் தன்பயணத்தைத் தொடர முயற்சிக்க, கீழே வைத்த விக்ரகத்தை எடுக்க அது அசையாமல் இருக்கத் திகைத்தான். பின்னர் ஸ்ரீ ரங்கநாதரே விபீஷணனிடம் தனக்கு, நீர் வளமும் நிலவளமும் மிக்க இந்தத்தலமே உகந்திருப்பதால் தான் இங்கேயே தங்கிவிட திருவுள்ளம் கொண்டதாகக் கூறி, விபீஷணனும் வேண்டியபடி தினமும் அவனுக்குத் தரிசனம் அளிக்கும் வகையில் தன் திருமுகத்தை இலங்கை நோக்கி வைத்து, ஸ்ரீ ரங்கநாதர் அரங்கத்தில் சயனக் கோலம் மேற்கொண்டார். இது புராணம் கூறும் செய்தியாகும்.

இத்தகு புராணப் பெருமையும், பத்து ஆழ்வார்களின் பாசுரச் சிறப்பும் கொண்ட இத்திருவரங்கத் திருக்கோயில் சோழ, ஹோய்சாள, நாயக்க மன்னர்களின் காலத்தில் செல்வத்தின் ஆட்சியிலும், புகழின் உச்சியிலும் திகழ்ந்திருந்தது. இம்மன்னர்களின் காலத்தில் இக்கோயில் பலவாறாக விரிந்து ஏழு பிராகாரங்களையும், 21 கோபுரங்களையும், சுமார் 40க்கும் மேற்பட்ட சிறு கோயில்களையும் தன்னிடத்தே கொண்டு சுமார் 150 ஏக்கர் நிலப்பரப்பில் 'மண்ணில் வைகுந்தமாக"விளங்கியது. பல்வேறு குறுநில மன்னர்களும் இக்கோயில் நாயகனுக்கு பொன்னென்றும், மணியென்றும் பல அணிகலன்களையும், கிராமங்களையும், நிலங்களையும், பண்ணைகளையும் நன்கொடையாக அளிக்க, பல சமயங்களில் அப்பகுதி வறட்சியாலும், வெள்ளத்தாலும் துவண்ட போது, இக்கோயிலே ஒரு 'நிவாரண் நிதி' யாக இருந்துள்ளது. கி. பி. 1251-1268 வரை இப்பகுதியினை ஆண்ட ஜடாவர்மன் முதலாம் சுந்தர பாண்டியன் இக்கோயிலுக்குக் கருவறை ஒன்றும், விஷ்ணு நரசிம்மனுக்கும் விஷ்வக்சேனருக்கும் கோயில்களும், கோயிலுக்கென ஒரு சமையற்கூடம் ஒன்றினையும் கட்டிக் கோயில் வளர உதவிட்டான். இது மட்டுமா? ஸ்ரீரங்கநாதரை பொன்னாலும், மணியாலும் அலங்கரித்து அவனழைக் கண்டு களித்தான். விலையுயர்ந்த நவரத்தின முத்து மாலைகளையும், தான் கைப்பற்றிய காடக நாட்டின் (ஒரிஸ்ஸா) அரசு கருவூலத்திலிருந்து பல விலையுயர்ந்த பொன்னாபரணங்களையம் இறைவனுக்கு அளித்து மகிழ்ந்தான். இறைவனுக்குத் தெப்போற்சவ விழா எடுப்பித்து, இறைவன் உலா வர தங்கத்திலேயே தெப்பம் ஒன்றினை செய்து அளித்தான். இன்னும் ஒரு செய்தி! படகு ஒன்று செய்வித்து, அதில் தன் பட்டத்து யானையை ஏற்றி அதில் தான் அமர்ந்து இத்தெப்போற்சவத்தைக் கண்டு மகிழ்ந்தான். மேலும் மற்றொரு பட்கினைச்

(45-ம் பக்கம் பார்க்க)



# கிருத்திவாஸ இராமாயணம்

வங்காள மொழியில் கிருத்திவாஸர் என்பவரால் இயற்றப்பட்ட இராமாயணம் உண்மையிலேயே பல் சுவை பொருந்தியதாகும். யுத்த காண்டம் பல புதிய தகவல்களுடனும் மாற்றங்களுடனும் அமைக்கப்பட்டுள்ளது.



யுத்தத்தில் கரனது மகனை மகராக்ஷன் மாண்ட பிறகு தருணி சேனன் என்ற அரக்கர் தலைவனை இராவணன் அழைத்துவரச் செய்தான். இராம லக்ஷ்மணர்களை வென்று இலங்கையைக் காப்பாற்றும்படி அவனுக்கு உத்திரவிட்டான்.

தருணி ஸேனன் "அப்படியே செய்கிறேன்" என்று கூறி இராவணனை வலம் வந்து வணங்கினன். பிறகு ஆடை ஆபரணங்களை அணிந்து, பல வித திவ்ய ஆயுதங்களுடன் போருக்குக் கிளம்பினன்.

அவனது ரதம் முழுவதும் இராம நாமம் பொறிக்கப் பட்டிருந்தது; கொடியிலும் இராமநாமமே திகழ்ந்தது. மேற்கு வாயில் வழியே வெளி வந்த அவ்வரக்கர் தலைவனை முதலில் நீலன் என்ற வானரத் தலைவன் எதிர் கொண்டான். இராமநாமத்தால் தன்னை அலங்கரித்து வந்த தருணி ஸேனனை நீலன் வஞ்சகம் நிறைந்த மாயாவி என்று இடித்துப் பேசிக் கடுமையாகத் தாக்கினன். ஆனால் விரைவில் நீலனைத் தருணிஸேனன் மூர்ச்சை அடையச் செய்தான். வானர அரசனை சுக்ரீவனும் போரில் மூர்ச்சையானன். இராம தூதனை அனுமானையே தருணி சேனன் சிறிது நிலைகுலையச் செய்து விட்டு ரதத்தை இராம லக்ஷ்மணர்களின் இருப்பிடத்திற்குச் செலுத்தினன்.

இவனது போர்க் கோலம் கண்டு வியந்த இராமன் விபீஷணனை அழைத்து இவன் யாரென விசாரித்தார், விபீஷணன் இராமனிடம் 'தருணிஸேனன் ஓர் அரக்கனே என்றாலும் தங்களிடம் அளவற்ற பக்தி கொண்டவன்; நேர்மையாளன்' என்று கூறினன்.

ஸ்ரீராமன் தமக்கு பக்தர்களைக் காட்டிலும் பிரியமானவர்கள் கிடையாது என்று கூறி அவனது அபீஷ்டம் பூர்த்தியாக வாழ்த்தினர்.

இதனிடையில் லக்ஷ்மணனல் தருணிஸேனன் தடுக்கப்பட்டான். லக்ஷ்மணனல் பிரயோகிக்கப்பட்ட நாகாஸ்திரத்தை அரக்கன் கருடாஸ்திரத்தால் தடுத்தான். பிறகு இராமன் இருப்பிடம் அடைந்த தருணி ஸேனன் ரதத்திலிருந்து இறங்கி இராமனது பாதங்களில் வீழ்ந்து வணங்கித் தனக்கு முக்தி வேண்டினன்.

பகைவனகவும் பக்தனகவும் தம் எதிரே நிற்கும் தருணி ஸேனனைக் கண்ட இராமபிரானின் கண்களில் நீர் மல்கியது. விபீஷணனை அழைத்து, "இத்தகைய பக்தனைக் கொன்று நான் என்ன நன்மையடைந்து என்ன பயன்?" என்று கூறி வருந்தினர். வில்லை வீசி எறிந்துவிட்டு மௌனமாக ஓரிடத்தில் போய் அமர்ந்து விட்டார்.

இராமனது மனநிலை அறிந்த தருணிஸேனன் தான் இராமனல் வதம் செய்யப்படமாட்டோமோ எனக் கவலையுற்றான். தனது விருப்

---

திப்பிராஜபுரம் பி. ரவீந்திரன் பி.ஏ.

---

பம் நிறைவேறுமல் போய்விடுமோ என்று கருதி இராமனைப் போருக்கு அழைத்தான். தான் இதுவரை நடித்ததாகவும், அதை நம்பி இராமன் ஏமாந்து விட்டதாகவும், உண்மையில் மாயாவியும், வரங்களைப் பெற்றவனுமான தனது ஆயுதமான பாசத்துக்கு முன் யாரும் எதிர் நிற்க இயலாது என்றும் கூறி கர்ஜித்தான். தனது வில்லை டங்காரம் செய்து ஒலி எழுப்பினுன். வானர சேனைகளையும் அழிக்கத் தொடங்கினுன். விபீஷணனது தூண்டுதலால் இராமனும் யுத்தத்திற்கு ஆயுத்தமானுர்; பிறகு இருவரும் கடும்போர் புரிந்தனர்.

பிரம்மாஸ்திரம் தவிர எதுவும் தருணிஸேனனைக் கொல்லாது என்று வரம் உள்ளதாகவும், தயங்காமல் விரைவில் அவ்வரக்கனைக் கொல்லாவிடில் வானர சேனைகளில் யாருமே எஞ்சி இருக்க முடியாது என்றும் விபீஷணன் எடுத்துரைத்தான்.

இராமன் மந்திரம் ஓதி பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்தார். அது அரக்கனை நோக்கி விரைந்தது. அதைக் கண்டு மகிழ்ந்த தருணிஸேனன் இராமனைக் கை கூப்பி வணங்கி, "பிரபோ! என் விருப்பம் நிறைவேறியது. தங்கள் கையால் மரணமும் விதித்தது," என்று கூறி இராமநாமத்தை ஜபித்தவாறே இறந்தான்.

வானரர்களின் ஜயகோஷம் விண்ணைப் பிளந்தது. அப்போது விபீஷணன் விம்மி, விம்மி அழுதவாறே மூர்ச்சையாளுன். இராமன் விபீஷணனை மயக்கம் தெளிவித்துத் தேற்றித் துக்கத்திற்கான காரணத்தை விசாரித்தார்.

"பிரபோ! தற்போது தங்களால் வதம் செய்யப்பட்ட தருணி ஸேனன் என் மகன். ராக்ஷஸப் பிறவியிலிருந்து விடுபட வேண்டி, நீண்ட காலம் தவமிருந்து தங்கள் கையால் முக்தி அடையக் காத்திருந்தான். அவன் விருப்பம் நிறைவேறிவிட்டது. நானே இந்த ராக்ஷஸ சரீரத்தை தாங்கிக் கொண்டு உயிருடன் இருக்கிறேன்!" என்று புத்திர சோகத்தில் புலம்பி அழுதான் விபீஷணன். இராமன் அவனை அணைத்து ஆறுதல் கூறி ஒருவாறு அமைதிப்படுத்தினுர்.

இதே நேரத்தில் திவ்யமான தெய்வ சக்தியுள்ள யானைமீதேறி ஓர் அரக்கன் இராமனது சேனைகளை

---


ஓம் ஸ்ரீமாதரே நம:



**ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் ஸ்ரீ திருமுருக கிருபானந்தவாரியார்**

**மற்றும் பல மகான்களால் ஸ்ரீமுகமும் ஆசியும் அருளப் பெற்று நவசக்தி நிலையத்தாரால்**

**உருவாக்கப்படும் பூஜைக்குரிய யந்த்ரங்கள்.**

| | | ரூ |
|---|---|---|
| 1. | ஸ்ரீ மகாமேரு 16×16, 10×10, 6×6, 4½×4½ செ.மீ. (விலை கடிதம் மூலம் தெரிவிக்கப்படும்) | |
| 2. | ஸ்ரீ மகாலக்ஷ்மி மஹாயந்த்ரம் 24×24 செ. மீ. | 1000/- |
| 3. | ஸப்தஸதி மகா நவவர்ணம் (64 இதழ்கள்) 24×24 செ மீ. | 1000/- |
| 4. | மகாசுதர்ஸனம் மற்றும் மற்றைய யந்த்ரங்கள் (16 செ. மீ. × 16 செ மீ) ஒவ்வொன்றும் | 500/- |
| 5. | ஸ்ரீ சக்கரம் 8×8 செ. மீ. | 125/- |
| 6. | ஸ்ரீ சக்ரம் 5×5 செ. மீ. | 50/- |
| 7. | ஸ்வயம்வரா 8×8 செ. மீ. | 125/- |
| 8. | கார்த்தவீர்யார்ஜுனர் 8×8 செ. மீ. | 125/- |
| 9. | ஸர்வ ஜன மன் தான ஆகர்ஷண யந்த்ரம் 8×8 செ. மீ. | 125/- |
| 10. | அஷ்டலக்ஷ்மி யந்த்ரம் 8×8 செ. மீ. | 125/- |
| 11. | மகாவிஷ்ணு 8×8 செ. மீ | 125/- |
| 12. | மச்சயந்த்ரம் 8×8 செ. மீ. | 125/- |
| 13. | தஸமகாவித்யா (10 யந்த்ரங்கள்) ஒவ்வொன்றும் | 125/- |
| 14. | ஸ்வர்ண ஆகர்ஷண பைரவர் 8×8 செ. மீ. | 125/- |
| 15. | லக்ஷ்மிகுபேரன் 8×8 செ. மீ | 125/- |
| 16. | மற்றைய யந்த்ரங்கள் விலை 8×8 செ மீ. | 125/- |
| 17. | எலக்ட்ரானிக் காப்பர் பேங்கிள்ஸ் | 20/- |
| 18. | ஒரு பக்கம் ஸுதர்ஸனமும் மற்றொரு பக்கம் திருஷ்டி நிவர்த்தியும் கொண்ட பதக்கம் | 60/- |
| 19. | கண்திருஷ்டி நிவர்த்தி யந்த்ரம் (சட்டத்துடன்) | 55/- |
| 20. | மற்றைய பதக்கங்கள் (ஒவ்வொன்றும்) | 55/- |
| 21. | ஒரு பக்கம் ஐயப்பனின் திருவுருவமும் மறுபக்கம் ஐயப்ப சன்னிதானமும் கொண்ட பதக்கம் | 55/- |
| 22. | தத்தாத்ரேய யந்த்ரம் (வண்டிகளுக்கு) தீய விளைவுகளைக் களைய | 40/- |
| 23. | வெள்ளி இழையினுல் கோர்க்கப்பட்ட ஒரிஜனல் ருத்ராக்ஷமாலை மற்றும் ஸ்படிகமாலை ஒவ்வொன்றும் | 275/- |
| 24. | வெள்ளி இழையில் கோர்க்கப்பட்ட துளசிமணி மாலை (54 மணிகளைக் கொண்டது) | 90/- |
| 25. | வெள்ளி இழையில் கோர்க்கப்பட்ட தாமரை மணி மாலை (54 மணிகளைக் கொண்டது) | 125/- |

மேற்கூறிய பொருட்களைத் தவிர வேறுபல 108 யந்த்ரங்கள் எங்கள் நவசக்தி நிலையத்தில் கிடைக்கும். கோயில்களுக்கு, வீடுகளில் உள்ள பூஜை அறைகளுக்கு, மற்றும் கிராம சமய வழிபாட்டுக்கூடங்களுக்கு வேண்டிய யந்த்ரங்களும் கிடைக்கும். ஒவ்வொரு யந்த்ரத்தின் விலை ரூ.101/- இலவச விலைப்பட்டியலுக்கு 50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட முகவரியுடன் தொடர்பு கொள்ளுங்கள். வெளிநாட்டு சரக்காணைகள் 25% அதிக விலையுடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

விஸ்வகர்மகுல. ஸ்வாமிஜி ஸ்ரீ எஸ். டி. முருகபூஷணம்
ஸ்ரீவித்யா உபாசகர் & தலைவர் நவசக்தி நிலையம்,
153, லாயிட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்) கோபாலபுரம்,
சென்னை-600086. தொலைபேசி : 472013.

[ஆங்கிலம் மற்றும் தமிழில் மட்டுமே தொடர்பு கொள்ளுதல் வேண்டும்.]

"லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து"

அடைந்து லக்ஷ்மணனைக் காப்பாற்றி அனைவரையும் மகிழ்வுறச் செய்தார்.

பின்னர் யுத்தம் தொடர்ந்தது. மூன்றும் முறையாக இராமனுடன் இராவணன் போரிடச் சதுரங்க சேனை களுடன் யுத்தகளம் வந்தான். அப் போது இராவணனது தேர்த்தட்டில் துர்க்காதேவி அமர்ந்து கொண்டிருப் பதை இராமர் கண்டார். இராவண னுக்குத் துணையாக துர்க்காதேவியே வந்தபின் தாம் என்ன செய்வது என்று வருந்தினர்.

அப்போது பிறர் அறியாமல் பிரம்ம தேவர் இராமன்முன் தோன்றி "நீயும் துர்க்கையை நாளை முதல் அதிகாலை யில் வழிபட்டால் அருள் பெறலாம்" என்று கூறி மறைந்தார். அதன்படி மூன்று தினம் இராமன் பூஜித்தும், அன்னை துர்க்காதேவி இராவணனது ரதத்திலேயே வீற்றிருந்தாள்.

விபீஷணனின் யோசனைப்படி அனு மன் நூற்றியெட்டு நீலோத்பல புஷ் பங்களைக் கொணர்ந்து இராமனிடம் சமர்ப்பித்தார். இராமபிரான் உடனே துர்க்காஷ்டோத்திர சத நாமாக்களால் அம்பாளை பூஜித்தார். தேவியின் மாயையால் நூற்றி யெட்டுக்கு ஒரு புஷ்பம் குறைந்தது. மனம் கலங்கிய இராமன் உலக மக்கள் தன் கண்களை நீலோத்பல மலர்களாக வருணிப்பதைக் கருத்தில் கொண்டு ஒரு கண்ணைப் பிடுங்கி துர்க்காதேவி பாதங்களில் அர்ச்சிக்க முயன்றார். இராமனது செயலால் மனமரங்கிய அம்பிகை, கண்ணைப் பறிக்கும் முன்பே இராமபிரானைத் தடுத்து நிறுத்தி, தான் இராவண னிடமிருந்து அகன்று விடுவதாக வரம் கொடுத்து மறைந்தாள்.

இராவணனும் இராமனும் கடும் போர் புரிந்தனர். இறுதியில் இராம னது பிரம்மாஸ்திரத்தால் அடிபட்டு இராவணன் விழுந்தான். ஆனால் உயிர் பிரியவில்லை; பிரக்ஞையும், நிதானமும் சிறிதும் குறையவில்லை. அப்போது இராஜ தர்மத்தைப் பற்றி இராமபிரானும் இராவணனும் சிறிது நேரம் உரையாடினார்கள். நல்ல காரி யங்கள் செய்யத் தோன்றினால் உடனே அவற்றை நிறைவேற்ற வேண்டும் என்பதும், தீய செயல்களை ஒத்திப் போட வேண்டும் என்பதும் இப்பிறவியில் தான் கற்ற பாடம் என்று இராவணன் இராமனிடம் கூறினான். அதற்குத் திருஷ்டாந்த மாக யமலோகத்தில் நரக வேதனைப் படும் ஜீவன்களைக் காண நேர்ந்த போது நரகம் என்ற ஒன்றையே ஒழித்துவிட வேண்டும் என எண்ணிய தாகவும், அந்த நற்செயலைச் செய் யாமல் நாள் கடத்தி வந்ததாகவும் ஆனால் சூர்பணகையின் ஆலோசனைப் படி ஸீதாதேவியைக் கவர்ந்து வந்த தீயச் செயலை காலம் தாழ்த்தாமல் உடனே செய்ததாகவும் கூறி இராமனை வணங்கி உயிரை விட் டான்.

இராவணனது மறைவைபற்றிக் கேள்விப்பட்ட மண்டோதரி ஸீதா தேவியைக் கண்டு பிரலாபித்து, 'நீ உன் கணவனால் நிராகரிக்கப் படு வாய்' என்று சபித்துவிட்டு இராவ ணனைப் பின் தொடர்ந்தாள். பிறகு ஸீதாதேவியின் அக்னிப் பிரவேசம் முதலியன முடிந்து யாவரும் அயோத்தி அடைந்தனர்.

தேவ காரியத்துக்காக தான் பழி ஏற்றதை எண்ணி வருந்திய கைகேயியை ஸ்ரீராமபிரான் சமா தானம் செய்தார். பின்னர் விமரிசை யாக ஸ்ரீராம பட்டாபிஷேகம் நடை பெற்றது. ✠

---


## ஸர்வோத்தரண மகாஜப யக்ஞம்

தூய உள்ளம் படைத்தோரே !

ஸ்ரீபத்ரிநாத் புண்ணியத் தலத்தருகே ஸ்ரீ சூர்ய நாராயண பிரம்மசாரி அவர்கள் இறையருள் பெற்றவர். பக்தர்கள் மூலம் மந்த்ர ஜபங்கள் செய்வித்து, அவற்றை அயோத்தியா, மதுரா, மாயா (ஹரித்துவார்), காசி, காஞ்சி, அவந்தி (உஜ்ஜயனி), துவாரகா ஆகிய ஸப்தபுரங்களில் இறைவனுக்கு அர்ப்பணித்து இறை யருளை பக்தர்களுக்கு அவர் கிடைக்கச் செய்வார்.

1. ஓம் நமோ நாராயண. 2. ஓம் நமசிவாய. 3. ஓம் நமோ பகவதே வாசுதேவாய. 4. ஓம் ஸ்ரீலலிதா தேவ்யை நம:
5. ஓம் ஸ்ரீராம ஜெய ராம ஜெய ஜெய ராம. 6. ஸ்ரீராமா ராம ராம.

மேற்கூறிய மந்திரங்களில் விருப்பமானதை ஜபித்து, ஜபித்த எண்ணிக்கையை, மாலைகளில் (108 மணிகள்-ஒரு மாலை) அவருக்குத் தெரியப்படுத்த வேண்டும். 1987-ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் ஒவ்வொரு புண்ணியத் தலத்திலும்(ஸப்தபுரங்களில்)(108×7=756).ஜபங்கள், காணிக்கைகள் அனுப்பியவர்களின் பெயரில் பூஜைகள், ஹோமங்கள் முதலியன நடத்தப்படும்.

உடுதாபக்தி ரூ. 16/- க்கும் மேலே; சந்திரனுக்கு ஓர் நூலிழை சேவை ரூ. 58/- க்கு மேலே; யக்ஞம் ரூ. 116/-
ஸப்தபுரங்களில் யக்ஞம் ரூ. 516/-; ஒரு வேளை அன்னசேவை ரூ. 1116/-; விசேஷ சேவை ரூ. 2516/-

இதற்கு மேலும் காணிக்கை வழங்குவது பக்தர்களின் விருப்பம். ஜப எண்ணிக்கையைத் தெரிவித்து, காணிக்கை களை எம். ஓ, செக், மற்றும் டிராஃப்ட் மூலமாக கீழ்வரும் முகவரிக்கு 2—10—87 க்குள் அனுப்பவேண்டும்.

ரூ. 116/- க்கு மேலே காணிக்கை அனுப்பியவர்களுக்கு பிரஸாதம் அனுப்பப்படும்.

ஸ்ரீ சூர்யநாராயண பிரம்மசாரி, C/O கீதா பிரசாரமண்டலி, 55, நாராயணபிள்ளை தெரு, பெங்களூர் - 560 001.

# கம்பனின் வர்ணனைத் திறன்

நடாதூர் வி. திருமகள

'கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும்' 'விருத்தம் எனும் ஒண் பாவிற்குயர் கம்பன்' என்றெல்லாம் புகழ்ந்துரைக்கப்படும் கம்பன், '**கவிச் சக்ரவர்த்தி**' எனும் புகழுக்குப் பொருத்தமான தகைமையினன்.

> ''உலகம் யாவையும் தாமுளவாக்கலும்
> நிலைபெறுத்தலும், நீக்கலும்...'

என்று தொடங்கும் கம்பனின் கடவுள் வாழ்த்துப் பாடல், சாதி, மத, பேதங்களுக்கிடமின்றி, எல்லா மதத்தினரும் பாராட்டும் தன்மை பெற்றது.

வான்மீகர் அருளிய இராமாயணக் கதையை 'இராமாவதாரம்' எனப் பெயரிட்டுத் தமிழகத்தின் சூழலில், தமிழ் நாட்டுக்கே உரிய கலாச்சார அடிப்படையில், அப்பண்பாடு சிறிதும் பிறழாமல் வழி நூலாகப் புனைந்துள்ளான்.

இது பல இடங்களில் மூல நூலினின்று மாறுபட்டிருப்பினும், அவை 'ஏற்கத் தக்கவையே' என அனைவராலும் உணரப்படுவன. பக்தியின் அடிப்படையில் மட்டுமின்றி, இலக்கியச் செல்வமாகவும், உலகளவில் பெருமை பெறு காவியமாக கம்பநாடகம் விளங்குவதில் வியப்பில்லையே !

சாதாரணமாக எல்லா வழி நூற்களிலும் காணப்படும் குறைபாடுகள், இதில் அறவே களையப்பட்டுப் புத்தி லக்கியமாகவே தோற்றம் தரும் அரிய படைப்பாகும்.

கம்பராமாயணத்தில் வர்ணனைகள், கற்பனை நயங்கள், சொல்லாடசிகள், கருத்தாழங்கள் அதிக அளவில் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் வர்ணனைகளைப் பற்றி ஈண்டுக் காண்போம்.

ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியின் திருமேனியழகைக் கண்ட ஜனகபுத்ரி ஒரு கணம் தன்னை மறக்கிறாள். தன் உயிர் அக்கணமே பிரிந்தது போலானாளாம்.

அவன் தோற்றத்தை—

> ''இந்திர நீலமொத்து இருண்ட குஞ்சியும்
> சந்திரவதனமும் தாழ்ந்த கைகளும்
> சுந்தர மணிவரைத் தோளுமே அல
> முந்தி என் உயிரை அம் முறுவல் உண்டதே !''.
>
> (குஞ்சி—தலைமுடி)

என்று சீதை நினைப்பதாக வர்ணிக்கும் அழகில், பெண்களும் மயங்கிவிடுவரன்றோ ?

ஸ்ரீ ராமபிரானின் மேனி கருமை நிறம். அதனைக் கம்பன் கார்மேகத் திற்கீடாக வர்ணிப்பதைப் பாருங்கள்:

> ''சீரைச் சுற்றித் திருமகள் பின்செல
> மூரி விற்கை இளையவன் முன் செல
> காரை ஒத்தவன் போம்படி கண்ட அவ்
> வூரை உற்றது உணர்த்தவும் ஒண்ணுமோ ?''
>
> (சீர்-காவியுடை, மூரி-வலிமை)

கோசல தேசத்தை வர்ணிக்கப் புகுகிறார் கவிச்சக்ரவர்த்தி. 'அங்கு எதுவுமே இல்லை ; ஆனாலும் மக்கள் சந்தோஷமாக வாழ்க்கை நடத்துகின்றனர். எப்படி ?'

> ''வண்மை இல்லை ; ஓர் வறுமை இன்மையால்
> திண்மை இல்லை ; நேர் செறுநர் இலாமையால
> வெண்மை இல்லை ; பல் கேள்வி மேவலால்
> உண்மை இல்லை; பொய்யுரை இலாமையால் !''
>
> (வெண்மை-அறியாமை)

என்று காட்டுவது, ஓர் இலட்சிய நாட்டைப்பற்றி வர்ணிக்கும் பாங்கு தானே ?

'' நாட்டின் இயற்கைவளம் எப்பேர்ப்பட்டது தெரியுமா ? அந்நாட்டில் சங்கு அறுக்க ஆளின்றிச் (சிந்து வாரின்றி) சங்குகள் நீரில் உறங்குமாம். ஏராளமாக நெல்மணிகள் விளைவித்த பெரிய பொறுப்பு கழிந்து, மர நிழலில் எருமைகள் உறங்குமாம். மாலைகளாகும் மலர்கள் பறிக்கப் படாததால் அவற்றில் வண்டுகள் உறங்குமாம். இறுதியில், 'தன் கடமையாகிய செல்வம் அளிக்கும் தொழில், அந்நாட்டு மக்களுக்கு அவசியமில்லை; அந்த அளவு அவர்கள் சுகபோகமுடையோர்' என்பதால் தன் கடமையை விடுத்த திருமகள் அங்குள்ள தாமரைகளில் உறங்குகிறாளாம் !''

ஆ ! எத்தகு உயர்ந்த கற்பனை வளமிக்க வர்ணனை....!

கம்பன் எனும் கவிச்சிங்கம், தன் அரும்பெரும் காவ்யத்தில் இதுபோல் ஒப்பற்ற பல வர்ணனைகளை எடுத்தாள்கிறான்.

கூனியெனும் மந்தரை சூழ்ச்சியால் அன்பு துறந்த கைகேசி போல, சூர்ப்பணகையின் பெருஞ் சூழ்ச்சியாலும், சொல்லாற்றலாலும், தங்கை என்ற நம்பிக்கையினாலும் வீரம் துறந்த காமியாகிவிட்டான் இராவணன்.

> ''மயிலுடைச் சாயலாளை
> வஞ்சியா முன்னம் நீண்ட
> எயிலுடை இலங்கைநாதன்
> இதயமாஞ் சிறையில் வைத்தான் ;
> அயிலுடை அரக்கன் உள்ளம்
> அவ்வழி மெல்ல மெல்ல
> வெயிலுடை நாளில் உற்ற
> வெண்ணெய்போல் வெதும்பிற்றன்றே''.

தங்கை வாய்க் கேட்ட மங்கையைக் கண்டு அடைவதற்கு முன்பே, இதயச் சிறையில் சீதையை வைத்தானும். எயிலுடை இலங்கைநான் உள்ளத்துள்ள ஜானகியை அப்புறப்படுத்தல்

# பிரபவப் பெண்ணே வருகவே!

அருட்ஜோதி தெய்வத்தின் அருள்கொண்ட பெண்ணாள்
"பிரபவா"கப் பொலிந்த பெருமைக்கு உரியாள்
திருமாலின் சோதரியின் திருவருளும் சேர்ப்பாள்
திருமகளின் கருணையும் திறனுக்கி வைப்பாள்

எட்டுத்திக்கும் காவலுற அஷ்டலெக்ஷ்மி துணையால்
நாட்டிவிட்ட நன்மைகள் கூட்டிவைக்க வந்தாள்
பாட்டுப்பாடி பூசைசெய்து நாட்டும்நல் பக்தியால்
ஈட்டும் புகழும் மொட்டவிழ்த்த மலராகும்

கலைகள் வளர்த்து கவலைகள் ஒழித்து
விலையில் அன்பில் வேறுபாடு மறைத்து
பாலுக்குள் பதமென பண்பினை அளித்து
நாலுவேதக் கருவாகி நம்மைக்காக்கும் தாயானாள்

உழைப்பும் செழிப்பும் விளைக்கும் நன்மை
உண்மை அன்பில் உலகு போற்றும்
எண்ணங்கள் சிறந்து வண்ணங்கள் ஆக்கும்
கண்ணின் மணியாகப் பிரபவப்பெண்ணே வருகவே!

**திரு. சு. பாலாஜி பாபு — பரமக்குடி.**

எளியது அன்று என்பது கம்பன் குறிப்பு.

அடுத்து ஒரு காட்சியைச் சித்தரிக்கிறார் கம்ப நாடார்.

இராவணனால் சிறையெடுக்கப் பட்ட சீதை, இலங்கையில் அசோக வனக் காவலில் அரக்கியரிடையே அமர்ந்துள்ளாள். அவளது தோற்றம் புழுதி படிந்த வைரம் போல் காட்சியளிக்கிறதாம். விண்மீன்களிடையே ஒளிவிடும் நன்மதிபோல் வீற்றிருக்கும் அன்னையின் நிலையை அனுமன் உரைக்கிறான்.

'ஐயன்மீர்! என் அன்னை, தம்பி இலக்குவனார் அமைத்துக் கொடுத்த பர்ணசாலையில் சோகமே உருவாகக் காணப்பட்டார்.

"இற்பிறப் பென்ப தொன்றும்
இரும்பொறை யென்பதொன்றும்
கற்பெனும் பெயரதொன்றும்
களிநடனம் புரியக் கண்டேன்"

எனப் பகர்வான் ஆஞ்சநேயன். இராமனை வந்து வணங்கி நின்றதுமே அவன் கூறிய வார்த்தை—

"கண்டனன் கற்பினுக்கணியைக்
கண்களால்"

என்பதுதான். 'சொல்லின் செல்வன்' அனுமன் மூலம், சீதையின் கற்புத்திறத்தை 'பிறிதோர் சொல் வெல்லும் இன்மை' அறிந்து வர்ணிக்கிறாரே!

பிரும்மாஸ்திரத்தால் மயங்கியிருந்த இராமபிரானைக் காணச் சீதையைப் போர்க்களத்திற்கு இட்டுச் செல்கின்றனர் அரக்கர்கள். இறந்தவன் போல்கிடக்கும் தன் ஆருயிர் நாயகனை-அண்ணலைக் கண்டதும், அவள் எய்திய அவல நிலைமையை வர்ணிக்கிறான் கவிச்சித்தன்.

அடடா! அவ்வரிகளில்தான் எத்தனை ஆழம்! எத்தகு சோகம்! கல்லும் கரைந்துருகச் செய்யும் அப் பாடலில் உலகத்துச் சோகத்தையெல்லாம் ஒன்று திரட்டித் தீட்டியுள்ள விதம், அவலத்தின் உச்சம்!

"மங்கை அழலும் வானாட்டு
மயில்கள் அழுதார்; மழவிடையான்
பங்கில் உறையும் குயில் அழுதாள்
பதும மலர்மேல் மாதழுதாள்
கங்கை அழுதாள்; நாமடந்தை
அழுதாள்; கமலத் தடங்கண்ணன்
தங்கை அழுதாள்; இரங்காத
அரக்கி மாருந் தளர்ந்தழுதார்'

கம்பனின் கற்பனைத் திறனை— வர்ணனை வளமையைக் கூறப்புகுந்தால் நாளெல்லாம் மாளாது. கம்ப ராமாயணம் முழுவதுமே காவியச் சுவையும், பொருளாழமும் மிகுந்து கற்றூர்க்குக் கழிபேருவகை அளிக்கிறது என்பதில் இரண்டாவது கருத்துக்கு இடமே இல்லை.

'கல்லையும் பெண்ணுக்கி வைத்த கமல மலர்ப் பாதனின்' கதை ஒரு சாகரம். தான் காணும் ஒவ்வொரு காட்சியையும் வர்ணனைத் திறம் மிகுத்து—இலக்கிய நயம் ஏற்றிப் பரவவிடுவதில்தான் கம்பனின் கவிப் பெருமையே கடலளவு விரிகின்றது. காப்பிய நலன்கள் பயின்று வர, நாடகப் பாங்கும், கட்டுக் கோப்பும் அமைய வடித்திருப்பதாலோ இதனை,

"எத்திக்கும் போற்றும் இராமன்
திருக்கதையை
தித்திக்கும் செந்தமிழில் செய்தளித்து
—நித்தமும்
அம்புவியில் மக்கள் அமுதம் அருந்த
வைத்த
கம்பன் கவியே கவி'

என்று புலவோர் ஏத்திப் பாராட்டுகின்றனர்?



# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ் யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 7

யஸ்ய நாஹம்க்ருதோ பாவோ
புத்திர் யஸ்ய ந லிப்யதே |
ஹத்வாபி ஸ இமான் லோகான்
ந ஹந்தி ந நிபத்யதே || (18-17)

'எவனுக்கு அஹங்காரமில்லையோ, யாருடைய புத்தி பற்றுகிறதில்லையோ, அவன் இவ்வுலகத்தாரைக் கொன்றாலும் கொல்லாதவனே, பந்தப்படாதவனே'.

சாதாரண மனிதனுக்கும் ஞானிக்கும் இடையிலுள்ள வேறுபாடு இந்த சுலோகத்தில் எடுத்துக் கூறப்படுகிறது.

நாடகம் ஒன்று மேடையில் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. அதில் ஒரு காட்சி, ஒருவன் மற்றொருவனைக் கொலை செய்து விடுகிறான். நாடகம் முடிந்த பிறகு கொலை செய்தவன் தன்னைக் கொலைகாரன் என்றோ, கொலை செய்யப்பட்டவன் தன்னைக் கொலையுண்டவன் என்றோ கருதாமல், இருவருமே சிரித்துப் பேசிக் கொண்டு தத்தம் வீடு நோக்கிச் செல்லுகிறார்கள். ஆனால் இதே நிகழ்ச்சிகள் நிஜ வாழ்வில் நிகழ்ந்தால் நடப்பது வேறு. நாடகத்தில் அவர்கள் வெறுமனே நடித்தார்கள். அது அவர்களது மனதில் எந்தவிதமான அகங்காரத்தையோ அல்லது கர்தருத்வ பாவத்தையோ உண்டு பண்ணவில்லை. ஆனால் வாழ்வில் உண்மையில் நடக்கும் நிகழ்ச்சிகள் அதில் சம்பந்தப்பட்டவர்களது மனத்தில் ஆழ்ந்த பதிவை ஏற்படுத்தி விடுகிறது. இவ்விரண்டு நிகழ்ச்சிகளையும் அதாவது கனவில் மரணம், நனவில் மரணம் போன்றவற்றை ஒரே பாங்கில் பொருட்படுத்துவது ஞானியரின் செயலாகும். ஞானியர் சென்றது கருதார். இனிச் சேர்வது நினையார்.

மகாபாரத யுத்தத்தில் அர்ஜுனன் தன் பாட்டனாராகிய பீஷ்மரைக் கொன்றான். எனினும் அவன் கொலையாளியாகத் தன்னைக் கருதவில்லை. பீஷ்மர் தம்மைக் கொல்லப்பட்டவராகக் கருதவில்லை. ஏன்? இருவர் மனத்திலுமே 'நான் செய்தேன்' என்ற அகங்காரம் இல்லை. இறைவன் கையில் தங்களை வெறும் கருவிகளாகக் கருதியே அவர்கள் கொல்லப்பட்டனர். மரணத்தை பீஷ்மர் கிழிந்த சட்டையைத் தூர எறிவதற்கு நிகராகக் கருதினர். கண்ணாடியில் தோன்றும் பிம்பம் ஆடுவது போல் தெரிந்தாலும் அதனால் கண்ணாடி எந்தவிதத்திலும் பாதிக்கப் படாமல் இருப்பது போன்று, உலகச் செயல்களால் ஞானி எவ்விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை.

ஆத்மா செயலற்றது. அதில் பிரகிருதியின் செயல்கள் யாவும், கண்ணாடியில் தெரியும் பிம்பங்களுக்கு நிகராக நிகழ்கின்றன. பிம்பத்தில் தெரியும் மாற்றங்கள் கண்ணாடியைப் பாதிக்காதது போன்று பிரகிருதியில் ஏற்படும் செயல்கள் சிறிதும் ஆத்மாவைப் பாதிப்பதில்லை. 'நான் ஆத்ம சொரூபமே, இந்த உடல், மனம் புலன்கள் போன்ற எதுவுமல்ல' என்று உறுதியாக எண்ணுபவனை பிரகிருதி எவ்விதத்திலும் கட்டுப் படுத்தாது.

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.S.c., M.Phil.,
ஆசிரியர், 'சம்யஜோதி' மதுரை.

ஞானம் ஞேயம் பரிக்ஞாதா
த்ரிவிதா கர்மசோதனா |
கரணம் கர்ம கர்தேதி
த்ரிவித: கர்மஸங்க்ரஹம் || (18-18)

'அறிவு, அறியப்படு பொருள், அறிபவன் எனக் கர்மத்துக்குத் தூண்டுதல் மூன்று விதமாகும். கருவி, கர்மம், கர்த்தா எனக் கர்மத்துக்கு இருப்பிடம் மூன்று விதம்.'

தூரத்தில் அழகிய மலை தென்படுகிறது. அதை நாம் பார்க்கிறோம். மலை அறியப்படு பொருள். அதை அறியும் நாம் அறிபவர் ஆகின்றோம். மலையை மலை என்று அறிவது அறிவு அல்லது ஞானம் ஆகிறது. அறியப்படுபொருள் 'ஞேயம்' என்றும் அறிபவன் 'பரிக்ஞாதா' என்றும் அழைக்கப்படுகின்றனர். இந்த ஞானம், ஞேயம், பரிக்ஞாதா ஆகிய மூன்றும் திரிபுடி எனப்படுகிறது. இம்மூன்றில் ஒன்று இருந்தால் மற்ற இரண்டும் கூடவே இருக்கும். ஒரு முக்கோணத்திற்கு மூன்று கோணங்கள் இருப்பது போல இம்மூன்றும் இணைந்தே காணப்படுகின்றன. ஞானம், ஞேயம், பரிக்ஞாதா என்ற திரிப்புடி போல் கருவி, கருமம், கர்த்தா என்பதும் மற்றொரு வகையில் இணைந்து காணப் படுகின்றன. மனம், வாக்கு, காயம் ஆகியவற்றின் செயல் இம்மூன்றின் சேர்க்கையாலேயே நடைபெறுகின்றன.

கர்மம் என்றால அதைச் செய்யும் கர்த்தாவும் எதைக் கொண்டு கர்மம் செய்யப்படுகிறதோ அந்தக் கருவியும் கூடவே வேண்டும். கருவியில் இருவகை உண்டு. அகக்கருவி, புறக்

கருவி என்பனவே அவையாகும்' அகக்கருவி அந்தக் கரணம் என்றும் அழைக்கப்படுகிறது. மனம், புத்தி, சித்தம் அகங்காரம் ஆகியவை அகக் கருவிகளாகும். மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்தும் புறக் கருவிகளாகும். இவைதான் ஐந்து ஞானேந்திரியங்களாகவும், ஐந்து கர்மேந்திரியங்களாகவும் செயல்படுகின்றன. கர்மம் செய்யும் ஜீவன் கர்த்தா அல்லது செய்பவன் ஆகிறான். ஞானமும் கர்மமும் இணைந்தே செயல்படுவதால் கர்த்தா அல்லது ஜீவாத்மா படிப்படியாக முன்னேற்ற மடைகிறான். உடலும், உள்ளமும் ஒருங்கே வளர்ச்சி அடைந்தால்தான் அது உண்மையான வளர்ச்சியாகக் கருதப்படும். ஒரு வகை முன்னேற்றத்திற்கு மேலே சொல்லப்பட்ட ஞான திரிபுடியும், கர்மதிரிபுடியும் இரண்டும் தேவையாகும்.

நாம் பெறும் ஞானத்திலும், செய்யும் கர்மத்திலும் உயர்ந்தது, தாழ்ந்தது என்ற வேறுபாடு காணப்படுகிறதல்லவா. அதற்கும் காரணம் யாது என்பது அடுத்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது.

ஞானம் கர்ம ச கர்தா ச
த்ரிதைவ குணபேதத: |
ப்ரோச்யதே குணஸங்க்யானே
யதாவச்ருணு தான்யபி ||(18-19)

'குண வேறுபாட்டினால் ஞானமும், கர்மமும், கர்த்தாவும் மூவகை என்றும் ஸாங்க்ய சாஸ்திரத்தில் சொல்லப்படுகிறது. அவைகளையும் உள்ளபடி கேள்.'

நமது செயல்கள் யாவும் முக்குணங்களின் வசப்பட்டது என்று முன்பு பலமுறை சொல்லப்படுகிறது. ஸத்வ, ரஜஸ், தமஸ் எனப்படும் அந்த முக்குணங்களே நம்மை ஆட்டிப் படைக்கின்றன. பிரகிருதி தத்துவங்களை விளக்கும் சாஸ்திரம் ஸாங்க்யம் எனப்படுகிறது. ஆறு சாஸ்திரங்களில் ஸாங்க்ய சாஸ்திரம் நான்காவது இடத்தைப் பெறுகிறது. இது முக்குணங்களின் பாகுபாட்டை அழகுற விளக்குகிறது. கபில முனிவரால் இது இயற்றப்பட்டது ஆகும். புருஷர்கள் பலவாறாக உண்டு என்று சொல்லும் ஸாங்க்ய சாஸ்திரம் அவற்றிற்கு மேலாக ஒரு பரமாத்மா உண்டு என்று சொல்லுவதில்லை. எனவே பரப்ரம்மத்தை அறிவதற்கு வேதாந்த சாஸ்திரமே பிரமாணமாகிறது. முக்குண மயமாயுள்ள இயற்கைத் தத்துவங்களை அறிய ஸாங்க்ய சாஸ்திரம் பயன்படுகிறது. எனவே பகவான் அதை ஈண்டு குறிப்பிடுகிறார்.

வேதாந்தம் ஸாங்க்யத்திற்கு முரண்பட்டது. எனினும் இங்கே ஸாங்க்யத்தில் உள்ள சிறப்பு அம்சத்தை பகவான் எடுத்துக் கூறுவது, மாற்றுக் கருத்து உள்ள இடத்திலும் இருக்கும் நல்ல அம்சங்களை நாம் ஒதுக்கித் தள்ளாமல் வரவேற்க வேண்டும் என்பதற்காகவேயாகும். ஞானம் கர்மம் மற்றும் கர்த்தா ஆகிய மூன்றும் குண வேறுபாட்டை முன்னிட்டு மூவகைப்படும். இனி வர இருக்கும் சுலோகங்களில் பகவான் அவற்றைத் தனித் தனியாக எடுத்து விளக்கிக் கூற இருக்கிறார்.

ஞானத்தைப் பெறுபவன் அதிகாரி எனப்படுகிறான். உத்தம, மத்யம், அதம அதிகாரி என்று இதிலும் மூன்று வகைப்படும். ஞானத்தை ஏற்கும் முறையை ஒட்டி இவ்வேறுபாடு காணப்படுகிறது. பெட்ரோல், கரி, வாழைத் தண்டு இம்மூன்றும் எரியும் தன்மையுடையவை எனினும் பெட்ரோல் உடனே தீப்பற்றிக் கொள்ளும், வாழைத் தண்டில் தீ மூட்ட மிகுந்த சிரமமும் நேரமும் ஆகும். இடைப்பட்டது கரி. அது போல மௌனோபதேசம் தலை சிறந்தது. படிப்படியாகக் கீழே வரவர அதன் தரம் வேறுபடுகிறது. புகட்டுபவன் வல்லவராயிருந்தால் மிக மந்த மாணவனுக்கும் உண்மையை ஓரளவு புகட்ட முடியும். இங்கே பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் தாம் தலை சிறந்த ஆசிரியர் என்பதை நிரூபித்து மிகக் கடினமான விஷயத்தை தெளிவாக எடுத்துக் கூறுகிறார்.

(தொடரும்)

## சிவதரிசன பலன்

காலை தொழ கற்றை வினை கட்டகலும், கட்டுசசி
வேலை தொழ இப்பிறப்பில் வெந்துயர் போம் — மாலையினில்
வந்து சிவன் தாளை சிந்தித்தால் ஏழ் பிறப்பின்
வெந்துயர் எல்லாம் விடும்.

## ஒரு நாளின் ஆறு பொழுதுகளில் இறைவனை வணங்குக

"எழுதரு மறைகள் தேரா இறைவனை எல்லில் கங்குல்
பொழுதரு காலத்து என்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமேல் ஏறத் துளும்பு கண்ணீருள் மல்கி
அழுதடி அடைந்த அன்பன் அடியவர்க்கு அடிமை செய்வாம
— பரஞ்சோதி முனிவர்.

பரஞ்சோதி முனிவர் தாம் எழுதிய திருவிளையாடற் புராணத்தில் ஒருவன் தினந்தோறும் ஆறு பொழுதுகளில், இறைவனை வணங்க வேண்டும் என்று கூறியுள்ளார்.

திரு. கே. பாலசுப்பிரமணியன் B.A.B.Ed., — தச்சநல்லூர்.

# மணப்பெண்ணின் தலையில் நுகத்தடி வைப்பதேன்?

திருமணத்தில் கன்னிகாதானத்துக்கு முன்பு, மணப்பெண்ணைத் தகப்பனுர் மடியில் உட்கார வைத்துக்கொள்ள, அப்பெண்ணின் தலையில் வரன் (மணமகன்) தர்ப்பத்தாலான ஒரு வளையத்தை வைத்து, அதன் மீது ஒரு நுகத்தடியையும் வைப்பான். நுகத்தடியின் வலப்புற துவாரம் அந்த வளையத்தின் மேலிருக்கும்படி செய்துகொண்டு

"கேந : கேரத : கேயுகஸ்ய ஸசீப்தே—
அபாவரம்
இந்த்ர த்ரி : பூர்த்வீ அகரத்ஸுர்ய
வர்ச்சஸம் "

என்ற மந்த்ரத்தைச் சொல்லுவான். அப்போது மணமக்களின் சகோதரிகளும் தாயார்களும் அருகிலிருப்பார்கள்.

பின்னர் நுகத்தடியின் துவாரத்தில்,

"ஸம் தே ஹிரண்யம் ஸமுஸந்து ஆபா
ஸம்தே:
மேதிபவது ஸம்யுகஸ்ய த்ருத்ம
ஸம்தே ஆப : ஸதபவித்ரா : பவந்து
அதாபத்யா
தத்வகும் ஸகும் ஸ்ருஜஸ்வ "

என்ற மந்த்ரத்தைச் சொல்லிப் பொன்காசை (அல்லது திருமாங்கல்யத்தையே) வைக்கிறுன்.

இதன் மூலம், மணப்பெண்ணுக்குத் தெரிந்தோ தெரியாமலோ உடலில் ஏதேனும் நோய் நொடி இருப்பின் அது நீங்கிக் கணவனுக்குகந்தவளாய் ஆகிவிடுவாள் என்பதே! இதன் உட்பொருளை விளக்கும் வண்ணம், பின்னணியில் ஒரு வரலாறுமுண்டு!

அத்திரி முனிவரின் புதல்வி அபாலை என்பவள் மணப்பருவமெய்தி கடிமணம் கொண்டாள். ஆனுல், அவள் உடலில் சருமநோயிருந்தது. அது காரணத்தால் அவள் கணவன் அவளை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டான்! மனம் வருந்தினுர் முனிவர். முற்பிறவியின் நற்பயனுல் அபாலை தேவேந்திரனைக் குறித்து வெகுகாலம் தவமியற்றினுள்.

தவத்திற்கு மெச்சிய இந்திரன் பிரத்யக்ஷமானுன். அபாலை மகிழ்ந்தாள். தனது குறையினைக் கூறினுள்.

மனமிரங்கிய தேவர்கோன் அபாலையைத் தனது தேர்ச் சக்கரத்தின் துவாரங்களில் நுழைத்து வெளியே எடுத்தான், அப்போது அவளுடைய உடலிலிருந்த நோய் முள்ளம்பன்றியின் உருவில் வெளியே வந்தது.

மீண்டும் அபாலையைத் தேர்த்தட்டில் தானமருமிடத்திலிருந்த துவாரத்தில் நுழைத்து வெளியே இழுத்தான். அப்போது அவளுடைய உடலிலிருந்த நோய் உடும்பு என்ற ஜந்துவின் வடிவில் வெளியேறியது.

மூன்றும் முறையாகத் தன் தேரிலுள்ள நுகத்தடியில் உள்ள துவாரத்தில் அவளை வெளியே இழுக்க, அவளுடைய நோய் ஓணுன் உருவில் வெளிப்பட்டது.

இப்படி மூன்று முறை அபாலையானவள் இந்திரனின் தேரின் துவாரங்களில் நுழைக்கப்பட்ட வெளியேற்றப்பட்டதன் மூலமாக அவள் உடலிலிருந்த நோய் முற்றிலும் நீங்கி ஒளிவீசுமோர் அழகியாக விளங்கவே, தன் கணவனுடன் சேர்ந்தனள்.

இந்த வரலாற்றின்படியே, இந்திரனது தேர்ப்பகுதியில் அபாலையை நுழைத்ததன் ஞாபகமாகவும், அபாலை பரிபூர்ண குணமடைந்ததைப் போலவே மணப்பெண்ணும் (நோய் நொடி ஏதேனுமிருந்தால் பரிபூர்ண குணமெய்தி) மகிழ்வுடனிருக்க வேண்டுமென்ற எண்ணத்தினுலும், பெண்ணின் தலைமீது ஒரு நுகத்தடியை வைத்து அதன் துவாரத்தில் பொன்னை வைத்துத் தீர்த்தம் சேர்க்கின்றனர்.

இனி, முற்சொன்ன இரண்டு மந்த்ரங்களின் பொருளாவது :—

"சசிதேவியின் நாயகரான இந்திரனே அபாலையை சக்கரத்தின் துவாரத்திலும் தேரின் துவாரத்திலும் நுகத்தடியின் துவாரத்திலும் மூன்று முறை சுத்தப்படுத்திச் சூரியனைப் போல் ஒளிமிகச் செய்தனை! அதே பிரகாரம் இவளும் பிணி நீங்கப் பெற்று தேஜஸுடன் விளங்கட்டும்".

"(நுகத்தடியின் துவாரத்தில் வைக்கும்) இந்தப் பொன்னுல் உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும். ஜலங்கள் உனக்கு இதமளிக்கட்டும். மாடு பூட்டுவதற்கான முளை உனக்குச் சுகமளிக்கட்டும். நுகத்தடியின் துவாரம் உனக்கு இதமளிக்கட்டும். நூற்றுக்கணக்கான பொருள்களைப் புனிதமாக்கும் ஜலங்கள் உனக்குச் சுகத்தைக் கொடுக்கட்டும். அதன் பின்னர் கணவனுடன் சேருவாயாக!"

என்ற நல்லாசிகள், நல்லுரைகளுடன் கூடிய இம்மந்த்ரங்களின் கருத்துக்களின் சிறப்புத்தான் என்னே!

(ஆதாரம் : லிப்கோவின் 'விவாஹ மந்த்ரார்த்த போதினி'.)

'மயூரப்ரியா'

# புருஷாகாரம்

ஒருவன் ஆத்ம க்ஷேமம் பெற, பக்தி, ப்ரபத்தி என இரண்டு மார்க்கங்கள் பேசப்பட்டு இருக்கின்றன. இதில் ப்ரபத்தி என்னும் சரணுகதியே முக்கியமானது. சரணுகதியைச் செய்யும்போது, சேதனன் ஆத்மக்ஷேமம் பெற, பிராட்டியை புருஷாகாரமாகவே, பகவானைப் பற்றுவதுதான் நம் ஸ்வரூபம்.

தோஷம் நிறைந்த ஒரு சேதனன், ஏதோ ஒரு ஜன்மாவில், ஒரு ஸதாசார்யனைக்கிட்டி, மந்திர உபதேசம் பெற்று, ஆத்ம ஞானம் உண்டாகி ருசி பிறந்து, பகவானைக் கிட்டுகிறுன். பகவான் ஸ்வதந்திரஞகையால், அந்த சேதனனுடைய அநாதி காலம் செய்த பாபத்தைப் பார்த்து சீறிச் சிவந்து, சாஸ்திரத்திற்குச் சேர, அவனை நிக்ரஹிக்கப் பார்க்கிறுன். அப்போது பக்கத்திலுள்ள பிராட்டி தாயாகையால், அச்சேதனிடம் மனமிரங்கி, ஈஸ்வரனுக்குப் பலபடியாக எடுத்துச் சொல்லி, அவனுக்குள்ள க்ருபையைக் கிளப்பி, அச்சேதனனை அனுக்ரஹிக்கும்படி செய்கிறுள். இதுதான் புருஷாகாரம் எனப்படும். 'தேவ்யா காருண்ய ரூபயா' கருணையே வடிவுடையவள் பிராட்டி. ஆகையால், நாம் பிராட்டியை புருஷாகாரமாகக் கொண்டே பகவானைப் பற்ற வேண்டும். ஸ்ரீமத் ராமாயணத்தில் பிராட்டியின் பெருமையைக் குறிக்கும் சில சந்தர்ப்பங்கள் :

1. அனுமான் ஸ்ரீராமனுடைய வெற்றியையும், ராவணன் அழிந்து போனதையும் ஸீதைக்குச் சொல்ல, அசோகவனம் போகிறுர். முன்பு ஸீதையை நலித்த ராக்ஷஸிகள் அனுமானைக் கண்டதும் நடுங்குகிறுர்கள். அப்போது அனுமான் அவர்களை சித்ரவதை செய்ய அனுமதிக்க வேண்டும் என ஸீதையைப் பிரார்த்திக்கிறுர். அதற்கு ஸீதை, "பாபாநாம் வா சுபாநாம் வா வதார்ஹாணும் ப்லவங்கமே கார்யம் கருணமார்யேன நகஸ்சிந் நாபராத்யதி,'. 'லோகத்தில் பாபம் செய்யாதவர்களில்லை. இந்த ராக்ஷஸிகள் பாபிகள் ஆனுலும் சரி, சுபைகளானுலும் சரி, வதைப்பதற்கு அருகரில்லை. அவர்கள் துர்கதியைக் கண்டு, கருணை காட்ட வேண்டியவர்களே" என பலவாறு அனுமனுக்குச் சொல்லி, அந்த ராக்ஷஸிகள், இவளை சரணம் பற்றுமல் இருக்கும் போதே அவர்களிடம் மனமிரங்கி, அவர்களைக் காப்பாற்றியிருக்கிறுள்.

2. காகாசுரன், மூக்கினுல் ஸீதையின் மார்பில் குத்திப் புண்படுத்தியிருக்கிறுன். ராவணனை விட மஹாபாபி இவன். ராமபாணம் துரத்த மூன்று லோகமும் சுற்றி, புகலற்று, நிற்க இடமில்லாமல், ராமன் இருக்குமிடமே வந்து விழ, அவன் துர்கதியைக் கண்டு, பிராட்டி அவனுக்கு இன்னருள் சுரந்திருக்கிறுள். 'வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்' இந்தக் காகம் நிரசனத்திற்கே அருகனுயிருந்தும், தன் க்ருபையினுலேயே அவன் பிராணனை ரக்ஷித்திருக்கிறுள் பிராட்டி. தத்துவம் என்னவெனில் :

ராக்ஷஸிகளோ, காகமோ அவளை சரணம் பற்றுதபோதே அவர்களுடைய துர்கதியைக் கண்டு தானே இரக்கங்கொண்டு அவர்களைக் காப்பாற்றி இருக்கிற பெருமை பிராட்டிக்கே உண்டு. நாம் பிராட்டியை பிரார்த்திக்க வேணுமென்பதில்லை. அவன் நம்மை ரக்ஷிப்பதை விலக்காதிருத்தலே வேண்டுவது. நமக்கு நாமுமில்லை. பிறருமில்லை என்கிற ப்ரதி பந்தக நிவர்த்தி ரூபமாகவே ரக்ஷிக்கிறவள் பிராட்டி.

எல்லா ஜீவராசிகளுக்கும் அபயமளிக்கும் கை, பிராட்டியின் கை. 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' 'நீ விட வேண்டியவைகளை விட்டு, என்னைப் பற்றினுல், நான் உன்னை ரக்ஷிக்கிறேன், அஞ்சாதே' என்று ஒரு நிபந்தனையுடன் கூடியது, பகவானுடைய அபயப் ப்ரதானம்.

பிராட்டியின் அபயப் ப்ரதானமோ வெனில், 'நீ உன் பாபத்தைக் கண்டும் பயப்படவேண்டாம், பகவான் உன்னைத் தண்டிப்பான் என அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தைப் பற்றியும் பயப்படவேண்டாம். ருசி உண்டானபோதே நீ பகவானைப் பற்றலாம். 'பவேயம் சரணம் ஹிவ:" என்று ராக்ஷஸிகளுக்கு அபயம் அளித்தாற்போல, 'நான் இருக்கிறேன், நீங்கள் அஞ்சவேண்டாம்' என்பது பிராட்டியின் அபயப் ப்ரதானம் செய்யும் செந்தாமரைக் கை. எம்பெருமானுர் (உடையவர்) ஸ்ரீரெங்க நாச்சியாரை புருஷாகாரமாகவே, ஸ்ரீ ரெங்கநாதனைச் சரணம் பற்றியிருக்கிறுர். ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அப்படியே செய்திருக்கிறுர்கள்.

பகவன் ஹிதபரன், பிராட்டி பிரியபரை. அபராதம் செய்த சேதனனும் வாழ்ந்துபோக வேண்டும் என இருப்பவர் பிராட்டி. த்வயம் பெரிய பிராட்டியாலே பேறு என்கிறது. அதாவது 'இவள் புருஷாகாரம் செய்தாலல்லது, பகவான் க்ருபை செய்யான்' என்கிறது. ஆகையினுல் நாம் பிராட்டியை புருஷாகாரமாகப் பற்ற வேண்டும்.

திரு. எஸ். இராமசுவாமி — மதுரை.

*

# ★ தாரமங்கலம் சிறப்பு

**அமைவிடம் :**

தாரமங்கலம், சேலத்தில் இருந்து சுமார் 24 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. மேட்டூர் அணையிலிருந்து 8 கிலோ மீட்டரில் உள்ளதால் மேட்டூர் அணைக்கட்டில் இருந்து செல்வோர் பலர். சங்கரி துர்க்கம் இரயில் நிலையத்திலிருந்து தாரமங்கலம் செல்லலாம். இரயில் நிலையத்திற்கும் தாரமங்கலத்திற்கும் இடையே உள்ள தூரம் 30 கிலோமீட்டர். தாராமங்கலம் என்ற இவ்வூரின் பெயர் திரிந்து தாரமங்கலம் என அழைக்கப்படுகிறது. இவ்வூர் வரலாற்றுச் சிறப்புடையது. அது மட்டுமல்ல, சிற்பச் சிறப்பும் வாய்ந்தது. வனவாசி, பக்கநாடு என்ற இருகாடுகளிடையே அமைந்திருக்கும் தாரமங்கலத்தின் அழகுதானென்னே?

**தல வரலாறு :**

தார மங்கலம் என்ற பெயர் வர பல காரணங்கள் கூறுவர். இங்கே வதியும் இறைவன் கைலாநாதருக்கும் சிவகாமி அம்மைக்கும் இங்குத் திருமணம் நடந்தபோது, இறைவியை இறைவனுக்குத் தாரை வார்த்துக் கொடுத்ததால் தாரமங்கலம் என்ற காரணப்பெயர் பெற்றதாகக் கூறுவர். வேறு சிலர், வாலியின் மனைவி தாரைக்காக இவ்வூர் கோயில் கட்டப்பட்டதாகவும், அதனுல் தாராமங்கலம் என்ற பெயர் பெற்றதாகவும் கருதுவர். மற்றொரு சாரார் இவ்வூரைச் சுற்றித் தாருகவனம் இருப்பதே இப்பெயருக்குக் காரணம் என்பர்.

**கோயில்கள் :**

தார மங்கலத்தில் உள்ள கோயில்கள் பல. ஏழாம் பரேசுவரர், ஆலடி விநாயகர், வேலாயுதசுவாமி, பத்திர காளி அம்மன், பெருமாள் கோயில்கள் தவிர, ஊர் மத்தியில் கைலாசநாதர் கோவிலும் உள்ளது. இவை எல்லாவற்றிலும் எல்லோர் நெஞ்சையும் கவரக் கூடியது ஒரு சிறு கோயிலே. அதுவே சித்தி விநாயகர் கோயில்.

**சித்தி விநாயகர் கோயில் :**

சித்தி விநாயகர் கோயில் பரந்த மேடைமீது அமைந்துள்ளது. அடித்தளம் முதல் கோபுரம் வரை கற்களாலேயே கட்டப்பட்டது. அடித்தளம் முதல் கற்களை எண்ணி பார்ப்போமேயானுல், மொத்தம் ஒன்பது கற்களால் கட்டப்பட்டிருப்பது தெரியும். ஒன்பது கணநாதனின் எண். ஏன்? அவன் நவக்கிரகங்களில் அதிபதி. நவரசங்களையும் அடக்கியாளும் இயல்பினன். அவன் சின்னமோ ௮. சீராக வாழ்கையைத் திருத்தி அமைக்கக் கூடியவன் என எடுத்துக் காட்டவே. இவ்வாறு ஒரு கோவில் யானை முகத்தானுக்கு ஒன்பது கற்களைக் கொண்டு கட்டிய சிற்பியின் திறன் கண்டு வியக்கிறோம்; ஆனுல் இவ்வியப்பு மேன்மேலும் அதிகரிக்கிறது. எப்போது?

**உள் பிரகாரம் வர்ணனை :**

சித்தி விநாயகனை வணங்கிவிட்டு உள் பிரகாரம் செல்கிறோம். இங்கே உள்ளன ஏழு தூண்கள். இடப்புறம் பார்க்கிறோம். முனிவரின் மனைவியார் பிச்சாண்டியாகத் தோன்றும் ஈசனுக்குச் சோறு இடுவதைக் காண்கிறோம். சிற்பத்தையா காண்கிறோம். கையில் ஓடு ஏந்தி, வலக்கரத்தில் நிற்கும் இறைவனேயல்லவா காட்சியளிக்கிறுன்! சோறிடும் பெருமாட்டியின் கண்களின் சோகம், நம் கண்ணீரையும் அல்லவா வரவழைக்கிறது!

மிகுந்த பிரயாசைப்பட்டு, உடலை அங்கிருந்து நகர்த்துகிறோம். மற்ற சிற்பங்கள்! ஆஹா, ஆஹா! வர்ணிக்க இயலுமோ! ஊர்த்துவத் தாண்டவம் ஆடும் இந்த இறைவனை முதலில் திருவோடு ஏந்தி பிச்சையெடுத்தான் என்று நம்மையும் அறியாது திகைக்கிறோம்; அதே சமயம் மோகன அவதார சிற்பத்தைக் கண்ணுறும் போது, இன்பக் கடலில் ஆழ்கிறோம்; திளைக்கிறோம். இதற்கு எதிர்மாருக அமைந்துள்ளது சிவசக்தி கோபம்! ருத்திர கலைக்கு இதுபோன்று வேறு உதாரணம் கிடைக்குமோ? இறைவன் இறைவியின் ஊடலைச் சித்தரிக்கும் தூண் என்னை ஏன் பார்க்காமல் செல்கிறீர்கள்? என அழைக்கிறது.

**இங்கும் ஒரு விசித்திரம் :**

அடுத்து பார்க்கிறோம். வாலியையும் அவன் தம்பி சுக்ரீவனையும். பிறிதொரு பக்கத்திலே நிற்கிருர் இராமன் ஒரு தூணில். அங்கிருந்து பார்க்கிறோம் வாலியை. திரும்பி வாலி தூணுக்கு வருகிறோம். அங்கிருந்து பார்த்தால் இராகவன் தெரியவில்லையே! என்னே விந்தை!

இராம காதையில் இராமன் இருந்தது வாலிக்குத் தெரியாது என்ற உண்மையைச் சிற்பங்களில் கணக்கிட்டு அமைத்திருக்கும் சிற்பிக்கு வெறும் புகழாரம் மட்டும் போதுமோ?

---

திரு. V. ஜலஜா சக்திதாஸன்,
M.A. M.ED,
சென்னை-28.

---

மற்றொரு புறம் இன்னொரு விசித்திரத்தையும் காண்கிறோம். வாலி இராமனை அமைத்த கோணம் போன்றே மன்மதன் இரதிக்கும் சிற்பங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. மன்மதன் இருக்கும் இடத்திலிருந்து பார்த்தால் இரதியைக் காணமுடியாது. இரதி இருக்கும் இடத்திலி

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம்
5-30 ,, 6-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 ,, 6-30 ,, —சுத்தி—முதல்மணி
6-30 ,, 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 ,, 12-30 ,, —சுத்தி, 2-வது மணி
12-00 ,, 6-00 மாலை —ஸர்வதரிசனம்
6-00 ,, 6-30 ,, —சுத்தி, 3-வது மணி
6-30 ,, 9-15 இரவு —ஸர்வதரிசனம்
9-15 ,, 9-30 ,, —சுத்தி, ஏகாந்தசேவை

காலை வெள்ளிக்கிழமைகளில்

9-00 ,, 10-00 ,, —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 ,, 10-00 ,, —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு)

## ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

ருந்து பார்த்தால் மன்மதனைக் காணலாம். ஈசன் காமனை எரித்து, இரதியின் கண்களுக்கு மட்டும் புலப்படுவான் என்ற வரத்தை எடுத்துக்காட்டவே இவ்வாறு அமைந்ததோ என்னவோ! எல்லா-உணர்ச்சிகளையும் அடக்கினால் சித்தி அடையலாம் என்று காட்டவே-போலும், இங்கு சித்தேசுவரர் கம்பீரமாகத் தோற்றமளிக்கிறார்.

தாரமங்கலம் கோயில் ஹொய்சாளர்களது சின்னங்களான யாளி-வாய்கல் உருண்டை, தாமரை, கிளிகள், தொங்கும் சங்கிலிகள் ஆகியவை கொண்டது.

**தானே உற்பத்தியானவ :**

இங்குள்ள கைலாசநாதர் மூலவர் சுயம்பு.

**விசேட வழிபாடுகள் :**

இவருக்கு ஆவணி, மாசி மாதங்களில் விசேட வழிபாடுகள் உண்டு. இம்மாதங்களில் சிற்சில நாட்களில் சூரிய கிரணங்கள் நேரே ஈசன் மீது விழும். இரு கால பூசை இக்காலத்திலே உண்டு.

**சிற்பக் கருவூலம் :**

சிற்பக் கருவூலமாக விளங்கும் தாரமங்கலம் பற்றி அறிந்தால், அங்கே செல்ல மனம் துள்ளாதோ? சுருக்கமாக விவரிக்கப்பட்ட இந்தச் சிற்பங்களைக் காண்போர், இன்னும் பல தனித் தன்மைகளைக் காணலாம், அனுபவிக்கலாம்; மற்றவர்களுக்கும் சொல்லலாம் அல்லவா!



# வள்ளலார் போற்றும் ஸ்ரீராம வள்ளல்



ஸ்ரீராம நாமத்தின் மகிமை அளவிட்டுக் கூற முடியாது. "இராம" என்றாலே பேரின்பம் நல்கும் என்பது சிவபெருமான் திருவாக்கு. ஆழ்வார்கள் இராம நாம மகிமையைப் பலவாறாகப் போற்றியுள்ளனர். தீங்கு செய்த காக்கைக்கும் அருள்பாலித்த பிரான் ஸ்ரீராம வள்ளல்.

அருட் பிரகாச வள்ளல் இராமலிங்க அடிகளார் இராமநாம மகிமையைக் கனிந்த உள்ளத்துடன் போற்றி மகிழ்வதைக் காணும் போது நெஞ்சு உருகுகின்றது.

இராம என்று சொன்னால் நம் நெஞ்சு மகிழ்ச்சி யடையும். மலர்ச்சியான வாழ்க்கையும் அமையும் என்று பாடுகின்றார் வள்ளலார்.

ஸ்ரீராமபிரானின் திருக்கோலம் திருமகளாகிய எம்பிராட்டிக்குப் பெரிதும் மகிழ்ச்சியைக் கொடுப்பதாக உள்ளது. மூலப் பரம்பொருள் கோதண்டம் தாங்கி தருமப் பேறாக நிலைத்திருக்கின்றது என்றால் அது ஸ்ரீ இராமபிரான் திருக்கோலமே. அவரே இருமையிலும் மட்டற்ற மகிழ்ச்சியைத் தரவல்லவர். அருட் பெருஞ்சோதியாக விளங்குபவரும் அவரே. இராம நாமத்தை ஓதினால் வெவ்வினை தீரும்.

அறம் பழுக்கும் தருவாகவும், உயிர்க்கெல்லாம் நல்ல துணையாகவும், அஞ்ஞானம் போக்கும் நற்குருவாகவும் விளங்கும் ஸ்ரீ இராமபிரானின் மெய்ப் புகழைத் தெளிந்து ஓதாமல் வெறுமனே இருப்பவர் பேவாயர் என்று சாடுகின்றார் அடிகளார்.

இராமபிரானின் ஈரெழுத்து மந்திரத்தின் பெருமைகளை 11 பாடல்கள் மூலம் போற்றிப்பாடும் இராமலிங்க வள்ளல், இராமபிரானைப் போற்றித் துதிக்கும் அருட்பாங்கும் கருணையும் நம் நெஞ்சை ஈர்த்துப் பரம்பொருளின் திருவடியில் சேர்க்க வல்லவையாக விளங்குகின்றன.

"என் குறைகளைத் தீர்க்க வழியறியாது அவலமெனும் கருங்கடலில் அழுந்துகின்றேனே! கடைத்தேறும் வழியில்லாமல் தவிக்கின்றேனே! என்னைக் காத்துக் கரை சேர்ப்பவர் உன்னையன்றி வேறொருவர் யாரும் இல்லை. என்னைச் சீறுவாயோ அல்லது கருணையுடன் இரக்கம் கொண்டு ஆதரிப்பாயோ! உன் திருவுள்ளத்தை யறிந்திலனே!" என்று நெஞ்சுருகப் பாடுகின்றார் வள்ளலார்.

கூறுவதோர் குணமில்லாக் கொடி
தாஞ் செல்வக்
குருட்டறிவோர் இடைப்படுமென்
குறைகளெல்லாம்
ஆறுவதோர் வழிகாணேன் அந்தோ
அந்தோ
அவலமெனும் கருங்கடலில்
அழுந்துகின்றேன்
ஏறுவதோர் வகையறியேன் எந்தா
யெந்தாய்
ஏற்றுகின்றோர் நின்னையன்றி
இல்லேன் என்னைச்
சீறுவதோ இரங்குவதோ யாதோ
வுன்றன்
திருவுளத்தைத் தெரியேனே சிறிய
னேனே.

இத்திருவருட்பாத் திருப்பாடல் ஆறாவது திருமுறையில் வகுக்கப்பட்டதிலிருந்தே இப்பாடலின் சிறப்பு நன்கு தெரிகின்றது.

கருணைக் கடலாக விளங்கும் பரமாத்மா இராமபிரானைத் திரு அவதாரம் செய்து பூவுலகில் புண்ணியம் விளங்கச் செய்ததோடல்லாமல் பேரின்பம் நல்கும் இராம நாமத்தையும் தந்தருளியது என்றால் ராம நாமத்தின் மகிமையை அளவிட்டுக் கூற முடியுமோ!

---

திரு. வ.த இராமசுப்பிரமணியம் எம்.ஏ.
காஞ்சிபுரம்

---

மேலும், அருட் பிரகாச வள்ளலாராகிய இராமலிங்க அடிகளார் ஸ்ரீஇராம வள்ளலின் கருணைத் திறத்தையும், அருளிச் செயல்களையும் இராம நாம மகிமையையும் உலகுக்குக் காட்டியுள்ளார் என்றால் அதனினும் பெருமை வேறேதும் உண்டோ!

மங்களம் நல்கும் இராம நாமத்தை நாமும் நெஞ்சில் பதித்து, நாவினால் ஓதி நலம் பல அடைவோமாக. ஸ்ரீஇராம வள்ளலின் இராம நாம மகிமையை உலகுக்கு வழங்கிய வள்ளல் இராமலிங்க அடிகளாரின் திருத்தாள் நிழலில் இனிது விளங்குவோமாக.

★

# வாலியின் மோக்ஷம்

உண்மையான பக்தர்கள்-அவர்கள் கொண்ட தூய வழிபாடும், நேம, நிஷ்டையும்,பக்தியும் இந்த உலகிற்கு தெரியாமலே தேவ ரகசியமாக அமைந்து விட்டன.

சிவபெருமானை தன் இஷ்ட தெய்வமாகவும்-ஞானசிரியனுகவும் கொண்டு வழி பட்டவன் வாலி.

உலகமே உறக்கத்தில் ஆழ்ந்த நேரம். சகல ஜீவராசிகளும் நித்திரா தேவியின் ஆட்சியில் மயங்கின. இருள் சூழ்ந்த அநதகாரம்-இரவின் இரண்டாம் யாமம் வாலி எழுந்து மாளிகையினின்று ஓர் உந்து தாவி கடலை அடைந்து - அலைகளின் ஊடே குடைந்து நீராடி - சிவலிங்க பிரதிஷ்டையுடன் 'ஓம் நமசிவாய-சிவாய நம - ஓம் பஞ்சாட்சர' ஓதலின் ஓசை அலைகளின் சப்தத்தை மிஞ்சும். பிறகு அடுத்த தாவல் - அடுத்த கடல் - இப்படியே ஏழு கடல்களிலும் ஹர நாம ஓதலின் ஓசை விண்ணை எட்டும்.

விண்ணிலே பார்வதி - பரமேஸ்வர லோக சம்ரக்ஷண பவனி. அவ்வேளையில் வாலியின் அன்றாட ஏழ்கடல் பூஜையை பூரணமாக ஏற்று அந்த பக்தனுக்கு அருளிய வரங்கள் பக்தனை அகிலத்தில் யாராலும் வெல்ல இயலாத வீரனுக்கியது.

அஷ்டதிக்கும் - தேவர்களும் அடிபணிய ஆண்ட ராவணேஸ்வரனே வாலியின் வாலுக்கே அஞ்ச வேண்டியிருந்தது. சிவபெருமானின் பேரருள் பெற்ற முனிவனுக, ராஜ ரிஷியாக எவருமே வெல்ல இயலாத தனி வீரனுகத் திகழ்ந்தான் வாலி.

இராவணேஸ்வரன் அனுமனிடம் "வண்திறல் ஆய வாலி வலியன் கொல் அரசின் வாழ்க்கை நன்று கொல்" என அவனது அரசியல் ஞானத்தையும் வினவுவான். அனுமன் பதிலில் "அஞ்சலை அரக்க - பார்விட்டு அந்தரம் அடைந்தான் அன்றே - வெஞ்சின வாலி மீளான் - வாலும் போய் விழித்தன்றே, அஞ்சன மேனியான் தன் அடுகணை ஒன்ருல் மாள்கிதுஞ்சினன்" என வாலின் ஏற்றத்தை கூறி இராவணனை பரிகசிப்பதோடு மாவீரனை ஒரு கணையால் இராமன் வீழ்த்திய இராமனின் பேற்றையும் மறைமுகமாக பேசுகிருன். சிவயோகி - சிவஞானி - ஒப்பற்ற வரங்களை பெற்றவன் வாலி - வெல்லுதற்கரியவன் - யாவராலும் சொல்லுதற்கரியவன். அவன் முடிவும் வந்துற்றது. அருள் பெற்ற சிவனடியார்களையோ திருமாலின் பக்தர்களையோ அவர்களின் பூவுலக வாழ்வு முடிவு பெறினும், எமனே எமபடர்களோ கொண்டு போவதில்லை. முடியவும் முடியாது என்பதை மார்க்கண்டேயர் விஷயத்தில் கால தேவன் கற்ற பாடம்.

எனவே வாலியின் பூவுலக - முடிவு எங்ஙனம் - யாரால் முடிப்பது - முக்கண் முதல்வரின் பேரன்பிற்குப் பாத்திரமானவன் முடிவை தான் ஏற்க மாட்டார். காலனும் செய்ய இயலாது.

அந்த வாலியின் ஆன்மாவை பாமேஸ்வரனின் பரமான்மாவிடம் சேர்க்கவல்ல - அவனுக்கு மோக்ஷ சாம்ராஜ்யம் கொடுக்கவல்ல தன்னை யொத்த விஷ்ணுவின் அவதாரமான இராமனுலேயே ஏற்பட வேண்டுமென கருதினர் ஆடலரசர்.

அதன்படியே கங்கைக் கரையிலே பார்வதிக்கு தாரக மந்திரமான 'இராம' மந்திரத்தை போதித்து, இஷ்ட பிள்ளையான வாலியின் முடிவை இராமனிடமே ஒப்படைக்க படுகிறது. ஹரி - ஹர - அஷ்டாச்சரமும் - பஞ்சாட்சரமும் - அவை ஒருங்கிணைந்த தாரக மந்திரத்தின் தலைவன் அப்பணி மேற்கொள்ளுகிருன்.

வாலி இராமனிடமும் அளவிலா பக்தி பூண்டவன். சுக்ரீவன் வாலியிடம் தோற்றும், திரும்ப போருக்கு வருவது - அவனுக்கு தசரத இராமனின் உதவி இருப்பதாக ஒற்றர் மூலம் அறிந்ததாக தாரை வாலியிடம் சொல்லுகிருள். உடனே வாலி தாரையை அறைந்து விடுகிருன். இராமனிடம் உள்ள அன்பின் பெருக்கு வாலியிடம் புலனுகிறது. இராமனை வாலி நேரில் கண்டால் கட்டித் தழுவி, தன் அரண்மனைக்கே அழைத்து சென்று விடுவான்.

வாலியின் மோக்ஷம் நடக்காமலேயே யோய் விடும். எவ்வுலகிலும் யாராலும் வாலிக்கு மோக்ஷம் கொடுக்க இயலாது போகும். இந்த இக்கட்டை தவிர்க்கவே இராமன் வாலியறியாது - தன்னையும் காணுது அஸ்த்தர பிரயோகம் செய்தது. பிரளயம் ஏற்பட்டு சகல அண்டங்களும் இயக்கமின்றி இருளில் கிடந்த காலை. விண்ணில் இரு ஜோதி கீற்றுகள் தோன்றின. ஒன்று உஷ்ணம் (சிவம்) ஒன்று குளிர்ச்சி (விஷ்ணு)

திரு. ரா தாமோதரன்,
திருமானூர்

பிறகு பிரம்ம தோற்றம் - எல்லாமே தோற்றுவிக்கப்பட்டன.

ஆகவே சிவ - விஷ்ணு பேதமில்லை. ஜீவன்களுக்கும் உஷ்ணமும்-குளிர்ச்சியும் தேவை. சைவ சமயமும் - வைணவ சமயமும் அனுதியானவை. அவைகளின் ஒற்றுமை பேணுவோம்- வேற்றுமையை ஒழிப்போம்.

தற்சமயம் பிறசமயங்கள் செயல் படும் வேகம் நம்மை விழிக்கச் செய்யட்டும். ஒன்றுபட்டு நமது புராதன சனுதன தர்மத்தை-இந்து சமயத்தை காப்போம்.

நமது முன்னேர்கள் எத்துணை படை எடுப்புகளை - கொள்ளைகளை - கொலைகளை எதிர்கொண்டு - நமது ஹிந்து சமயம் காக்கும் வேள்வியில் தங்களை புடம் போட்டனர்.

அந்த தியாக சீலர்களான பிதுர்க்களுக்கு நாம் செய்ய வேண்டிய பித்ருயக்ஞம், நம்மில் வேற்றுமை நீங்கி - ஹரியும் - சிவனும் - ஒன்றே என்ற தத்துவத்தை நிலை நாட்டுவதேயாம். ★

# கருத்து மாறிய பழமொழிகள்

ஓரினத்தின் பண்பாட்டை உணர்ந்து கொள்ளப் பயன்படும் கரு வூலங்கள் அவ்வினத்தவர் அன்றாடம் பயன்படுத்தும் பழமொழிகளாகும். அவை வாழ்க்கையின் அனைத்துத் துறைகளிலும் ஊடாடிக் கிடக்கின்ற தெனவும், மக்களின் அனுபவத்தின் திரண்டசாறு எனவும் சொல்லப்படு கின்றன.மேலை நாட்டுச் சிந்தனையாள ரான அரிஸ்டாட்டில் ''பழமொழிகள் அறிவின் வளர்ச்சியிலே பிறந்தவை. சுருக்கம், தெளிவு,பொருத்தம் ஆகிய சிறப்புகளால், நாள் தோறும் இறந்து கொண்டிருக்கும் இவ்வுலகில்,என்றும் இறவாமல் வாழ்கின்றன'' என்பார். பழமொழிகள் உண்மையின் குழந்தை கள் என்றும் ஒருவர் கூறிச் செல் கின்றார்.

இப்பழமொழிகள் பல்வேறு கூறு களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இங்கே எடுத்துக் கொள்ளப்படுவன ஆன் மீகச் சிந்தனையில் மலர்ந்த பழமொழி கள். காலந்தோறும் மக்களால் பயன் படுத்தும் போது, திரிந்துப் பொருள் மாறி பொலிவிழநது போன பழ மொழிகள் ஆயிரக்கணக்கானவை யாம். அவற்றில் சிலவற்றிற்கு இங்கே என் அறிவுக்கு எட்டியவரை விளக் கங்களைத் தந்திருக்கின்றேன். அவை களாவன.

1. 'அஞ்சுக்கு ரெண்டு பழுதில்லை'
2. 'இடம் கொடுத்தால் மடம் பிடுங்குவான்'
3. 'உலகம் பலவிதம்'
4. 'செய்வன திருந்தச் செய்'
5. 'தானாடாவிட்டாலும் தன் சதை ஆடும்'
6. 'ஆறிலும்சாவு நூறிலும்சாவு'

போன்ற பழமொழிகள் அடிக்கடி பேச்சு வழக்கில் பயன்படுத்தப்படு கின்ற பழமொழிகள் ஆகும். இவை ஒவ்வொன்றிற்கும் உண்மையான விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

அஞ்சுக்கு ரெண்டு பழுதில்லை :

இப்பழமொழிக்கு 5 வகைகளான பொருள் கூறலாம். ஒரு மனிதன் தான் செய்கின்ற காரியங்கள் அனைத் தையும் சரியாகச் செய்வான் என்று எதிர்பார்க்க முடியாது. நிறையத் தீமைகளாக இருந்தாலும் சிறிதளவு நன்மைகளாவது கலந்திருக்க வேண் டும்..''அஞ்சு'' என்பது ஐந்து. இதில் இரண்டாவது குற்றமில்லாததாக இருக்க வேண்டும்.

அ. பஞ்சாட்சரம்.
ஆ. ஐம்பொறிகள்.
இ. பஞ்சபூதங்கள்.
ஈ. பஞ்சகவ்வியம்.
உ. பஞ்சபாண்டவர்கள்.

அ. பஞ்சாட்சரம்.

''பஞ்சாட்சரம்'' என்பது 'சிவாய நம' என்று அஞ்செழுத்து மந்திரத் தைப் பற்றி சொல்லப்படும் வாசகம் ஆகும். ஒரு மனிதன் 'சிவாயநம' என்று 5 எழுத்துக்களையும் உச்சரிக் காவிட்டாலும் பரவாயில்லை 'சிவா' என்ற இரண்டெழுத்தையாவது கூறி னால் போதும் என்பதைத்தான் அஞ் சுக்கு ரெண்டு பழுதில்லை என்கின் றனர்கள். இன்றுங்கூட நமது இல் லங்களில் குழந்தைகள் குறும்புகள் செய்யும்போது ''சூசுவான்னு' இருங் களேன்' என்ற சொல்வதைப் பார்க்க லாம். 'சிவா' என்ற சொல்லே காலப்போக்கில் இந்த நிலைக்கு உரு மாறிவிட்டது.

ஆ. ஐம்பொறிகள் :

'பஞ்சபுலன்கள்' என்பதை ஐம் பொறிகள் என்பர். அவை,

மெய்-அசுத்தங்கள் தேங்கும்.

வாய்-பேச்சினால் கெடும்.

கண்-எவ்வளவுதான் பார்த்தாலும் கெடுதில்லை.

மூக்கு-கண்டகண்ட வாசனைகளைத் தேடும்.

செவி - எவ்வளவு கேட்பினும் காதுக்கு வலியெடுக்காது.

மேலே சொன்ன 5ல் கண்ணும் காதும் பழுதில்லாதவை. அதாவது குற்றமில்லாதவை. அதனால்தான் ''கண்ணால் கடவுளைப் பார்-காதால் அவன் புகழ் கேள்'' என்பர்.

இ. பஞ்சபூதங்கள் :

பஞ்சபூதங்களான நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம். இவற்றில் தீயும் ஆகாயமும் அசுமில்லாதவை.

நிலம் - இதற்காக பலர் சண்டை யிட்டு மடிந்து போவது உண்டு.

நீர் - இடத்துக்கேற்றவாறு மாறும் தன்மை உண்டு.

---

திரு. கோ. கு. குருசாமி,
கிருஷ்ணபுரம்

---

காற்று - திசைகளுக்கேற்ப தன் பெயரை மாற்றிக் கொள்கின்றது.

தீ - எல்லாவற்றையும் எரித்துச் சாம்பலாக்கித் தனித்து நிற்கும் தன்மை உடையது.

ஆகாயம்-எந்தத் துன்பமும் இத னால் இல்லை.

அதனால்தான் சிவபிரான் செந்நிற மேனியன், தீ வண்ணன் என்றும், அவன் குடியிருக்கின்ற தலங்கள் ஆகாயத்தலங்கள் என்று சொல்லப் படுகின்றன.

ஈ. பஞ்ச கவ்வியம் :

பஞ்ச கவ்வியங்கள் என்பது பாலில் இருந்து எடுக்கப்படுகின்ற 5 வகை யான அபிசேகப் பொருட்கள் ஆகும். அவை,

1. பால்-நாளானால் திரிந்துவிடும்.

2. மோர்-கெடுந்தன்மை உடையது.

3. தயிர்-கெடும்

4. நெய்-கெடாது

5. வெண்ணெய் - உருக்கினால் நெய்யாகும். ஆனால் கெடாது. எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் வைத்திருக்கலாம்.

உ. பஞ்சபாண்டவர்கள் :

பஞ்சபாண்டவர்களில், அரசியலிலும் சரி, போரிலும் சரி, மூவரைப்பற்றித்தான் அதிகமாகப் பேசப்படுகின்றன. வியாசரும், வில்லிபுத்தூராரும் தருமன், பீமன், அர்ச்சுனன் போன்ற மூவரைப் பற்றித்தான், அவர்கள் செயல்களை பற்றித்தான் குறிப்பிடுகிறார்களே தவிர நகுலன், சகாதேவன், இவர்களைப்பற்றி அதிகமாகக் குறிப்பதில்லை. இன்றைய சொற்பொழிவுகளிலும் மூவரைத்தான் விமர்சிக்கின்றார்கள். ஆக ஐந்து பேர்களில் பழுதில்லாதவர்கள் இருவர். ஆகவே அஞ்சுக்கு ரெண்டு பழுதில்லை.

இடம் கொடுத்தால் மடம் பிடுங்குவான் :

இந்தப் பழமொழியும் மக்களது பேச்சு வழக்கில் பொருள் மாறி உள்ளது. இன்றைய வழக்கப்படி "பரதேசி ஒருவனுக்கு இருக்க இடம் கொடுத்தால் காலப்போக்கில் அவனே மடத்தைப் பிடுங்கி அதிகாரம் செலுத்துவான்" என்ற பொருளில் வழங்கப்படுகின்றது.

ஆனால் அதன் உண்மையான விளக்கம் "எல்லாம் வல்ல இறைவனுக்கு இதயத்திலே இடம் கொடுத்தால்" நம்மிடையே ஒட்டிக்கொண்டிருக்கின்ற மடமாகிய அறியாமையை அவன் அகற்றுவான் என்பது தான் உண்மைப் பொருள். இதைத்தான் 'இடம் கொடுத்தால் மடம் பிடுங்குவான்' என்பார்கள்.

உலகம் பலவிதம் :

'உலகம் பலவிதம்' என்ற சொல்லோவியம் பலரும் பயன்படுத்துகின்ற வாக்கியமாகும். உலகில் வாழ்கின்ற மக்கள் பலவிதமான எண்ணங்களைக் கொண்டு வாழ்கிறார்கள் என்றாலும் ஓர் உண்மையை மறைத்துக் கொண்டுள்ளது அம்மொழி.

"உலகு+அம்பல+விதம்" என்று பிரித்தால் "உலகமானது அம்பலமாய் சிதம்பரத்தில் ஆடுகின்ற சிவபெருமான் ஆணைப்படியே இயங்குகிறது". இதைத்தான்,

"சாட்டிநிற்கும் அண்டமெல்லாம்
சாட்டையிலாப் பம்பரம்போல்
ஆட்டி வைக்கும் எம்பெருமான்"

என்பார் மாணிக்கவாசகர். சிவனது ஆட்டம் நின்று விட்டிடில் மனிதனின் நடமாட்டம் ஒடுங்கி விடும். உலகம் பலவிதம் என்ற பழமொழி இதன் பொருளை மறைத்துள்ளது.

"செய்வன திருத்தச் செய் :

வகுப்பறையில் ஆசிரியர் பாடம் நடத்தும்போது மாணவர்களைப் பார்த்துச் சொல்லப்படும் வாசகங்களில் இது ஒன்றாகும். செய்கின்ற காரியங்களை திருத்தமாக, தெளிவாக, கச்சிதமாக செய்ய வேண்டும் என்பது எல்லோரும் அறிந்த விளக்கமாகும். இதைவிட நுட்பமான விளக்கமாவது:

நீ செய்கின்ற காரியமானது மற்றவனுக்குப் பாடமாக வேண்டும். நீ பொய் சொல்லாமல் இருந்தால் உன்னைக் கடைப்பிடிப்பவனும் பொய்யுரைக்கமாட்டான். உன்னுடைய செயல்கள் மற்றவரைத் திருந்தச் செய்கின்ற வகையில்- இருக்க வேண்டும். இதைத்தான் திருவள்ளுவர்

'இன்னாசெய்தாரை ஒறுத்தல் அவர் நாண
நன்னயம் செய்து- விடல்.

என்கிறார்.

தானாடா விட்டாலும் தன் சதை ஆடும் :

பெரும்பாலும் இரத்த பாசத்திற்குச் சொல்லப்படும் பழமொழி ஆகும். இதில் 'தான்' என்பது உடம்பு. மனிதனுடைய மரண காலத்தில் உடம்பு ஆடாமல் அசையாமல் இருக்கும். ஆனால் ஒரே ஒரு உறுப்பு மட்டும் ஆடும். அது நாக்கு. எலும்பு இல்லாத ஒரே கருவி நாக்கு. அந்த இறுதிக் காலத்திலாவது தன்னுடைய நாமத்தைச் சொல்கின்றானா என்பதற்கு இறைவன் காட்டுகின்ற கடைசிக் கருணை. நினைத்தால் ஆடும். இதைத்தான் தானாட விட்டாலும் தன் சதை ஆடும் என்பார்கள். இதைத்தான் 'நாவிற்கணிகலம் நமச்சிவாயமே' என்பர் சமயக்குரவர்.

ஆறிலும் சாவு நூறிலும் சாவு :

சண்டை சச்சரவு எங்கெல்லாம் நிகழ்கிறதோ அங்கெல்லாம் ஒலிக்கப்படுகின்ற பழமொழி 'ஆறிலும் சாவு, நூறிலும் சாவு'. இன்றைக்கு ஒரு கை பார்த்து விடுகிறேன் என்று சொல்வார்கள் பலர். மேலோட்டமாகப் பார்க்கின்றபோது மனத்துணிவை வெளிப்படுத்துகின்ற பழமொழியாக இருந்தாலும், தத்துவம் ஒன்று உள்ளடங்கியுள்ளது.

பஞ்சபாண்டவருக்கும், கௌரவருக்கும் குருசேத்திரத்தில் போர் நிகழவிருக்கின்ற சமயம் குந்திதேவி கர்ணனைச் சந்தித்து நீ பாண்டவர் பக்கம் வந்து விடு என்று கட்டளையிட்டபோது கர்ணன் சொல்வதாகச் சொல்வார்:

'தாயே! நான் எந்தப் பக்கத்தில் நின்று போரிட்டாலும் நிகழவிருக்கின்ற சாவைத் தடுக்க முடியாது. பஞ்சபாண்டவர்களான 5 பேர்களோடு சேர்ந்து ஆறுவதாக இருந்தாலும் சாவது உறுதி. கௌரவர்கள் நூற்றுவர்களோடு சேர்ந்து சண்டையிட்டாலும் நான் அடையப்போவது சாவுதான். ஆகவே நான் யார் பக்கமும் வர மாட்டேன். நன்றிக் கடன் தீர்க்க துரியோதனன் பக்கமிருப்பேன்" என்று கூறுகின்றார். அதனால்தான் ஆறிலும் சாவு நூறிலும் சாவு என்று சொல்கின்றார்கள்.

மக்களின் தமிழ்ப் பழமொழிகள் தமிழரின் சமுதாயத்தை உள்ளவாறு காட்டும் கண்ணாடிகளாக விளங்கும். பழமொழிகளின் உண்மையான பொருட்களை வெளிக்கொணர வேண்டும், காலப்போக்கில் திரிந்து பொருள் மாறி உருமாறிப் போக விடாது உண்மைப் பொருளை காண முயல வேண்டும்.

# சத்திய சோதனை

நம் மனம் என்பதே, ஒரு குரு க்ஷேத்ரம்தான். அதில் தினம்தினம் பெரும் யுத்தம் நடந்து கொண்டே தான் இருக்கிறது. நல்ல எண்ணங்கள் நம்மை உயர்வான நிலைக்கு கொண்டு சென்றால், தீய எண்ணங்கள் அதன் குறுக்கே வந்து நம்மைச் செயலிழக்க வைக்கும். இந்த தர்ம சங்கடமான சூழ்நிலையில் சிக்க நேரும் போது எவருக்குமே தடுமாற்றம்தான் ஏற்படும்.

தர்மம், நியாயம் இவைகளைக் காண்பதும் எளிது. பெருமையாகப் பேசுவதும் எளிது. ஆனால் கடைப்பிடிப்பதுதான் மிகவும் அரிது. தர்மம் அதர்மம் இவை இரண்டுமே ஆண்டவனால் செலுத்தப்பட வேண்டிய சக்திகளாகும். அதனால்தான் இவைகள் சாமானியமானவர்களுக்குப் பெரும் சிக்கலை ஏற்படுத்துகிறது.

படிப்பவர்களின் சிந்தனைக்கு விருந்தாகவும் அறிவுக்கு ஒரு சவாலாகவும், இந்த தர்ம அதர்ம விளக்கங்கள் மகாபாரதத்தில் வியாசரால் நிறையவே சொல்லப்பட்டிருக்கின்றன. தர்மத்தின் போதனைக்காகவே பாரதம் படைக்கப்பட்டிருக்கிறது என்றாலும் மிகையில்லை!

உலகோருக்கு ஓர் எடுத்துக்காட்டாய் தன் வாழ்க்கையை அமைத்துக் கொண்டவன் குந்திதேவியின் மகனான தர்மன். அவனை தர்மராஜன் தர்ம சங்கடமான சூழ்நிலைகளில் சிக்க வைத்து சத்திய சோதனைகளை நடத்துகிறான். அந்தச் சோதனைகளில் நிதானம் தவறாமலும், தெளிந்த அறிவினாலும் அதர்மத்தைப் புறக்கணித்து தர்மத்தை நிலைநாட்டி இன்றளவும் இவ்வுலகில் தன் பெயரை நிலை நிறுத்திக் கொண்டவன் தர்மபுத்திரன். அவன் சந்தித்த சோதனைகள் எப்படிப்பட்டது என்று வியாசர் சொல்லி இருப்பதை நாமும்தான் கொஞ்சம் படித்துப் பார்க்கலாமே!

பாண்டவர்கள் பன்னிரண்டு வருஷங்கள் வனவாசம் செய்ய வேண்டும் என்பது சூதாட்ட ஒப்பந்தம் அல்லவா? அந்த ஒப்பந்தப்படி அவர்கள் அனுபவித்து வந்த வனவாசம் முடியும் காலம் நெருங்கிற்று. அந்த சந்தர்ப்பத்தில் ஒரு நாள், ஏழைப் பிராமணன் நெருப்பு பற்ற வைக்க வைத்திருந்த அரணிக் கட்டையின் மீது மான் ஒன்று வந்து உரசிக் கொண்டது. அப்போது அரணிக்கட்டை மானின் கொம்பில் மாட்டிக் கொள்ளவே அது மிரட்சியுடன் ஓடத்துவங்கியது. இதைக் கண்ட பிராமணன் கூக்குரலிட்ட படியே ஓடிப் போய் பாண்டவர்களிடம் முறையிட்டான். பாண்டவர்களும் மானைப் பிடிக்க ஓடினார்கள். முடிந்தால்தானே? அரணிக் கட்டையோடு ஓடிய மான் ஒரு மாயமான். அதனால் அது பாண்டவர்களைப் போக்கு காட்டிக் காட்டிற்குள் வெகு தூரம் இழுத்து வந்தபின் மாயமாய் மறைந்து விட்டது.

சோர்வினாலும் தாகத்தினால் களைத்துப்போன பாண்டவர்கள் ஒரு மரத்தடியில் அமர்ந்தார்கள் அப்போது நகுலன், "அந்த ஏழைப் பிராமணனுக்காக நம்மால் இந்த அற்ப காரியத்தைக் கூட செய்ய முடியாமல் போய் விட்டதே! அப்படி என்ன பாவத்தை நாம் செய்து விட்டோம்?" என்று வருந்தினான்.

நகுலனின் வருத்தம் பீமனுக்கும் வர, "பாஞ்சாலியை சபைக்குஇழுத்து வந்த அந்த அயோக்கியர்களை அப்போதே கொல்லாமல் விட்டதுதான் நாம் செய்த பெரிய பாவம்!" எனச் சொல்லியவாறே அருச்சுனனைப் பார்த்தான்.

அருச்சுனனும் சினத்துடன், "கர்ணன் சொன்ன கடுஞ்சொற்களைக் கேட்டபின்னும் அவனைக் கொல்லாமல் நான் சும்மா நின்றேனே........ அதனால் அல்லவோ இந்த துயரம் நமக்கு வந்தது" என்றான்.

எல்லோரும் களைப்பினாலும் ஏமாற்றத்தாலும் பொறுமை இழந்து தைரியத்தைக் கைவிட்டுப் பொருமிக் கொண்டிருப்பதைக் கண்ட தர்மபுத்திரனுக்கு ஒன்றும் சொல்லத்தோன்றவில்லை. பொறுக்க முடியாத தாகத்தினால் அவதிப்பட்ட தர்மன் நகுலனைப் பார்த்து, "தம்பி! சமீபத்தில் எங்காவது குளமோ ஆறோ இருக்குமா பார்!" என்றான்.

குமாரி டி. ஆர். மேகலை —செங்கல்பட்டு.

நகுலன் அருகே இருந்த மரத்தின் மீதேறிப் பார்த்து விட்டு வந்து, "ஆம் அண்ணா கொஞ்சம் தூரத்தில் நீர் நிலையை அடுத்து வளரும் செடி கொடிகளும் பறவைகளும் தென்படுகிறது. ஆகையால் அந்த இடத்தில் கட்டாயமாய்த் தண்ணீர் இருக்கும்" என்றான்.

"அப்படியானால் போய்ப் பார்த்து விட்டுத் தண்ணீர் கிடைத்தால் சீக்கிரம் எடுத்து வா!" என்று சொல்லி நகுலனை அனுப்பி வைத்தான் தர்மபுத்திரன்.

நினைத்ததைப் போலவே வந்த இடத்தில் ஒரு அழகான குளம் இருப்பதைக் கண்டு மனம் மகிழ்ந்த நகுலன் 'விரைவில் நம் தாகத்தைத் தணித்துக் கொண்டு காட்டில் காத்திருக்கும் சகோதரர்களுக்காக இந்த அம்

புருத்துாணியில் நீரை நிரப்பிச் செல்வோம்' என்ற எண்ணத்துடன் நகுலன் தண்ணீரில் கையை வைத்தான். அப்போது ஆகாயத்தில் ஒரு குரல் அசரீரியாய் ஒலித்தது.

''மாத்ரீ புத்திரனே! இது என் வசமுள்ள குளம். அதனுல் நீ என்கேள்விகளுக்கு விடை சொல்லி விட்டு உன் தாகத்தை தீர்த்துக்கொள்! தவருகக் கூறினுல் இறந்து போவாய்' என்றது.

அசரீரியின் குரல் நகுலனைத் திடுக்கிட வைத்தாலும் தாகத்தின் வேகத்தால் அசரீரியின் எச்சரிக்கையைப் புறக்கணித்து, தண்ணீரைக் குடித்தான். குடித்ததும் மயங்கி விழுந்து மாண்டு போனுன்

போனவன் வரவில்லையே என்று தர்மன் சகதேவனை அனுப்பி வைத்தான். குளத்தருகே வந்த சகதேவனைக் பூமியில் விழுந்து கிடக்கும் நகுலனைக் கண்டு, 'ஐயோ! அவனை யாரோ கொன்று விட்டார்கள் போலிருக்கிறதே' என நினைத்தபடியே அவனும் தாகத்தைத் தாளாமல் குளத்தில் இறங்கினுன். மீண்டும் அசரீரி, ''சகதேவா! சாகஸம் வேண்டாம்! இது என் வசமுள்ள குளம். என் கேள்விகளுக்கு விடை சொல்லிய பின் தண்ணீரைக்குடி' என்றது.

நகுலனைப் போலவே சகதேவனும் அசரீரியின் எச்சரிக்கையை அலட்சியப்படுத்தித் தண்ணீரைக் குடித்து விட்டு இறந்து போனுன்.

சகதேவனும் வராது போகவே தர்மன் அருச்சுனனை அனுப்பி வைத்தான். வெகு வேகமாய் குளத்தருகே வந்த அருச்சுனன் தம்பிகள் இறந்து கிடப்பதைக் கண்டு சிந்தனையில் ஆழ்ந்தவனுய் குளத்தில் இறங்கினுன்.

''அருச்சுனு! என் கேள்விகளுக்கு விடை சொல்லிவிட்டுத் தண்ணீரைக் குடி. இல்லையெனில் உன் தம்பிகளின் கதி உனக்கும் நேரும்'' என்று அருச்சுனனை எச்சரித்தது அசரீரி.

அருச்சுனனே கோபம் கொண்டு, ''நீ யார் என்னைத் தடுக்க? இதோ— என் பாணங்களால் உன்னைக் கொல்கிறேன் பார்!'' எனக் கடிந்துகொண்டே சத்தம் வந்த திக்கை நோக்கி அம்புகளை எய்தான்.

அசரீரி அம்புகளை அலட்சியம் செய்து, ''அருச்சுனு உன் அம்புகள் என்னை நெருங்காது. வீணுன கோபம் வேண்டாம். என் வினுக்களுக்கு விடை சொல்லிய பின் நீ உன் தாகத்தைத் தணித்துக் கொள்'' என்று மீண்டும் எச்சரித்தது.

எய்த அம்புகள் வீணுனதைக்கண்டு கடுங்கோபம் கொண்ட அருச்சுனன், 'முதலில் என் தாகத்தைத் தணித்துக் கொண்டு பின் இவனை வெல்வேன்!' எனத்தனக்குள் சொல்லிக்கொண்டே தண்ணீரை அள்ளிக் குடித்தான். அந்தோ பரிதாபம்! அருச்சுனனும் இறந்து போனுன்.

அருச்சுனனுவது தண்ணீருடன் வருவான் எனக் காத்திருந்த தர்மன் அவனும் வராது போகவே தளர்ந்து போய் பீமனை அழைத்து, ''சத்ருக்களை சம்ஹாரம் செய்பவனே! நிகரற்ற பலம் கொண்டவனே! என் விருப்பத்திற்குரிய பீமனே! அருச்சுனனும் திரும்பவில்லை. நீ போய் நடந்ததை அறிந்துகொண்டு தண்ணீரும் கொண்டு வா, தாகம் தாளவில்லை'' என்று பீமனை எச்சரித்து அனுப்பி வைத்தான்.

குளத்தருகே வந்த பீமன் தன் சகோதரர்கள் உயிரற்றுக் கிடப்பதைக் கண்டு தாளமுடியாத துயரத்தை அடைந்தான். 'இது யட்சர்களின் வேலையாகத்தான் இருக்கும். என் தாகத்தைத் தணித்துக்கொண்டு தேகபலத்தால் அவர்களை வெல்வேன்!' எனச் சூளுரைத்தவாறே அவனும் அந்த நச்சுப் பொய்கையில் இறங்கினுன்.

''வாயு புத்திரனே! இது என் வசமுள்ள குளம். என் கேள்விகளுக்கு விடை பகன்ற பின்னரே நீ தண்ணீரைக் குடிக்கலாம்'' என்று பீமனைத் தடுத்தது அசரீரி.

''கண்ணுக்குப் புலப்படாமல் நின்று என்னைத் தடுக்கும் நீ யார்? துணிவிருந்தால் எதிரே வந்து என்னைத் தடு பார்க்கலாம்!'' என்று கர்ஜித்த படியே பீமனும் அசரீரியை அலட்சியப்படுத்தி நச்சுத் தண்ணீரைக் குடித்து விட்டு மாய்ந்து போனுன்.

போனவர்கள் யாரும் திரும்பாமல் போகவே தர்மன் பலவிதமான சந்தேகங்களை மனதில் தேக்கிக்கொண்டு சகோதரர்களைத் தேடிப் போனுன். நீண்ட நேரம் நடந்த பின் ஜன சஞ்சாரமே இல்லாமல் உல்லாசமாய் பறந்து திரியும் பட்சிகளும் துள்ளித் திரியும் மான்களும் நிறைந்த அந்த அழகான நச்சுப் பொய்கையின் அருகே வந்தான். அங்கே புல்தரையின் மீது உயிரற்று வீழ்ந்து கிடக்கும் தன் தம்பிகளைக் கண்டு வியப்பும் வேதனையும் அடைந்தான்.

தாங்க முடியாத துயரத்துடன் சகோதரர்களை நெருங்கி, ''ஐயோ! அருமைத் தம்பிகளே உங்களைக் கொல்லும் வல்லமை படைத்தவர்களும் பூமியில் உண்டோ? தெய்வங்கள் சொன்ன வாக்கெல்லாம் பொய்யானதோ? வனவாசம் முடியும் தருணத்தில் இப்படி அநியாயமாய் மாய்ந்து போனீர்களே! இன்னும் நான் ஏன் உயிர் வாழ வேண்டும்?'' என்று துயரத்தைத் தாங்க முடியாமல் பலவாருய்ப் புலம்பி அழுதான் தர்மன். பிறகு சற்று நிதானித்து 'இது என்ன விந்தையாய் இருக்கிறதே? இறந்து கிடப்பவர்கள் மீது எந்தக் காயமும் இல்லை. அருகே எங்கும் ஜன நடமாட்டம் இருப்பதாகவும் தெரியவில்லை. இவர்கள் எப்படி இறந்தார்கள்? இது என்ன மாயமா? இல்லை.... துரியோதனன்

சூழ்ச்சியா?' என்று பலவாறும் சிந்தித்த தர்மன் குழப்பத்தின் மிகுதியாலும் நீண்ட நேரமாய் வாட்டியெடுக்கும் தாகத்தினுலும் சிறிது நேரம் செயலற்று நின்றுன். பின் தாகத்தைத் தணித்துக்கொள்ளும் எண்ணத்துடன் குளத்தில் இறங்கினுன்.

"தருமமே உருவாய் நிற்கும் குந்தி குமாரா! உன் தம்பிகளைப் போல் அலட்சியப்படுத்தாமல் நீயாவது என்னை மதித்து என் கேள்விகளுக்கு விடை சொல்லிவிட்டுத் தண்ணீரைக் குடி!" என்று முன் போலவே தர்மனையும் எச்சரித்தது அசரீரி.

தருமன் சற்று நிதானித்துப் பின் 'இது யாரோ யட்சனின் வாக்காகத்தான் இருக்க வேண்டும்.அதனுல் நாம் அதற்கு கட்டுப்பட்டே ஆக வேண்டும்!' என நினைத்துக்கொண்டு, "சரி. யட்சனே உன் கேள்விகளைக் கேள்!" என்றுன்.

"எது தினமும் சூரியனை உதிக்கச் செய்கிறது?" என்றது அசரீரி.

"பிரம்மம்", என்றுன் தர்மபுத்திரன்.

"மனிதனுக்கு எப்போதும் துணையாயிருப்பது எது?"

"தைரியம்".

"எந்த சாஸ்திரத்தைப் படிப்பதால் மனிதன் புத்திமான் ஆகிறுன்?"

"சாஸ்திரம் படிப்பதால் மட்டும் மனிதன் புத்திமான் ஆவது இல்லை. பெரியோர்களை அடுத்தே அவன் புத்திமான் ஆகிறுன்."

"எதை விட்டால் ஒருவன் எல்லோருக்கும் பிரியமானவனுகிறுன்?"

"தன்னைப் பற்றிய கர்வத்தை விட்டால் ஒருவன் மற்றவர்களுக்கு பிரியமானவன் ஆகிறுன்."

"எதை இழந்தால் மனிதனுக்குத் துயரம் இல்லை?"

"கவலையை இழந்தால் துயரம் இல்லை".

இவ்வாறு இன்னும் நிறைய கேள்விகளைத் தருமனிடம் அசரீரி கேட்க, தர்மபுத்திரன் ஒவ்வொரு கேள்விக்கும் அற்புதமாய் விடை கூறினுன். இறுதியில் யட்சன், "தர்மபுத்திரா! இறந்து கிடக்கும் உன் நான்கு தம்பியரில் ஒருவன் உயிர் பிழைப்பான். நீ யாரைக் கேட்கிறுய்?" என்றுன்.

கொஞ்ச நேரம் அமைதியாய் யோசித்த தர்மன், "தாமரைப் பூப் போல் மென்மையான குணம் கொண்டவனும் அகன்ற மார்பும் நீண்ட கைகளுமாய் இருக்கும் நகுலனே எனக்கு வேண்டும்!" என்றுன்.

தர்மபுத்திரனின் பதிலைக் கேட்ட யட்சன் பிரசன்னமாகி, "அருச்சுனனுடைய சாமார்த்தியமே உங்கள் பாதுகாப்பு அல்லவா?....உனக்கு விருப்பமானவன் நிகரற்ற பலம் கொண்ட பீமன் அல்லவா? அவர்களிருவரையும் விட்டுவிட்டு நீ ஏன் நகுலனைக் கேட்டாய்?" எனக் கேட்டான்.

"யட்சனே! தர்மம் ஒன்றே மனிதனுக்கு பாதுகாப்பு. பீமனே அருச்சுனனே அல்ல. தர்மம் புறக்கணிக்கப்படும்போது மனிதன் அந்த தர்மத்தாலேயே கொல்லப்படுகிறுன். குந்தியும் மாத்ரீயும் பாண்டுராஜனின் இரு மனைவிகள். குந்திக்கு நான் மிஞ்சினேன். மாத்ரி புத்திரன் ஒருவன் உயிருடன் இருந்தால் சமமாக இருக்கும் அல்லவா? அதனுலேயே நகுலனைக் கேட்டேன்!" என்றுன் தர்மன்.

தர்மனின் பதிலைக் கேட்டு மகிழ்ந்த யட்சன், "பட்சபாதமறியாத என் மகனே! உன் எல்லாத் தம்பிகளுமே உயிர் பெற்று எழுவார்கள். உன்னை நேரில் பார்க்கவும் உன்னைச் சோதிக்கவும் நானே மானுகவும் யட்சனுகவும் வந்தேன். என் சோதனையின் மூலம் தருமத்தைக் காக்கப் பிறந்தவன் நீ என்பதை உறுதிப்படுத்தி விட்டாய். வனவாசம் முடிந்த பின் செய்ய வேண்டிய அஞ்ஞாத வாசத்தையும் நீங்கள் வெற்றிகரமாகவே செய்து முடிப்பீர்கள்." என்று தர்மதேவன் தன் மகனுக்கு ஆசி கூறி வரமும் தந்து மறைந்தான்.

தர்மபுத்திரனுக்கு ஏற்பட்ட சத்திய சோதனைகள் இத்துடன் முடியவில்லை! மனிதன் ஒரு பொருளை அடைய விரும்புகிறுன் என்றுல்.... அதை அடையும் வரைதான் அதன் மீது மோகமும் பற்றும் இருக்கும். விரும்பியது கிடைத்து விட்டால் அதன் மீதுள்ள ஆசை கொஞ்சம் கொஞ்சமாகவோ இல்லை......ஒரேயடியாகவோ தீர்ந்து போகும். ஆசை அற்றுப் போன நிலையில் புதுத் துயரங்களும் மனச் சஞ்சலங்களும் வந்து சேரும். பாண்டவர்கள் விஷயத்தில் இது உண்மையாயிற்று.

(அடுத்த இதழில் முடியும்)

# நம்பிக்கை

நம்மை நாமே வெறுக்காமலிருப்பது நமது முதற்கடமையாகும். முன்னேற்றமடைவதற்கு முதலில் சுய நம்பிக்கையும் இரண்டாவதாக இறைவன் மேல் நம்பிக்கையும் வேண்டும். சுய நம்பிக்கை இல்லாதவன் கடவுள் மேல் நம்பிக்கை வைக்க மாட்டான்.

— சுவாமி விவேகானந்தர்

தகவல்: திருமதி கமலா மாரியப்பன் — கோயம்புத்தூர்.



மாத திருப்பாவை படவிளக்கங்கள் தவறுதலாக மாசி இதழில் பிரசுரிக்கப்பட்டுள்ளன.
இவ்இதழில் இருமாதங்களுக்குரியன பிரசுரிக்கப்பட்டுள்ளன. தவறுதலுக்கு வருந்துகிறோம். (ஆ-ர்.)

# ஸ்ரீ ஆண்டாள் அருளும் திருப்பாவை

ஸ்ரீ ஹரி-சென்னை-71. சித்திரம் : சசி-சென்னை.

## நாராயணமூர்த்தி கேசவனே!

"திருவே உருவான செல்வமே! பேய்க்குணம் பெற்ற பெண்ணே! அங்கு இங்கு ஏனுதபடி எங்கும்—தன் பேடைகளுடன், 'கீச்சு கீச்சு' என்று கலந்து, இனிமையாய்ப் பேசுகின்ற வலியன் குருவிகளின் சப்தத்தை நீ இன்னமும் கேட்கவில்லையோ? போகட்டும்...... காசு மாலை முதலிய அணிமணிகள், முன்னும் பின்னுமாக மாறி மாறி கைகளை அசைக்கும்போது கை வளையல்களுடன் சேர்ந்து ஒலிக்க, நறுமணங் கமழும் நீண்ட கருங்கூந்தலையுடைய, இடைச்சியர் விடியற்காலையில், தயிரைக் கடையும் ஓசை எழுகிறதே! அதுகூட உன் செவிகளில் கேட்கவில்லையோ?

நங்கையர்க் கெல்லாம் நாயகமாய்த் திகழும் மங்கைச் செல்வமே! ஆதிசேஷனை இருப்பிடமாகக் கொண்ட ஸ்ரீமந் நாராயணனின் திருஅவதாரமாகத் திகழும் ஸ்ரீ கண்ணபிரானை நாங்கள் எண்ணுகிறோம், தியானிக்கிறோம், பாடுகிறோம். நாங்கள் பாடுவதையும் கேட்டுக் கொண்டே படுத்துக் கிடக்கிறாயோ? பிரகாசிக்கும் பேரொளித் திருவுரு பெற்றவளே! எம்பாவையே! எழுக, விரைந்து வருக, கதவைத்திற!" என்று ஸ்ரீ ஆண்டாள் அழைக்கிறாள்.

கீசுகீ சென்றெங்கும் ஆனைச்சாத் தன் கலந்து
 பேசின பேச்சரவம் கேட்டிலையோ? பேய்ப் பெண்ணே!
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
 வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால்
ஓசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ?
 நாயகப் பெண்பிள்ளாய்! நாராயணன் மூர்த்தி
கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ?
 தேசமுடையாய்! திறவேலோ ரெம்பாவாய்!

ஸ்ரீ பகவத் விஷயத்திலே, நீண்ட நெடுங்காலமாக ஆழ்ந்திருந்தும் மறதியால் - மறந்து விடக்கூடிய ஆன்மாக்களை எழுப்பி - இறைவனின் நாமாக்களைப் பாட வைத்து, தியானம் செய்ய வைத்து - ஆழிசூழ் இப்புவியில் உண்மையான இன்பத்தை இவ்வுலக உயிர்கள் அனைத்தும் பெற வைக்க முயற்சிக்கிறாள் ஸ்ரீ கோதையார்.

"பொழுது புலரப் போகிறது பொழுது புலரப்போகிறது' என்கிறீர்களே, பொழுது புலர என்ன அடையாளம்? என்று வினவுகிறாள் கட்டிலில், துயிலில் கட்டுண்ட 'அவள்! துயிலெழுப்ப வந்த கோதைக்கோ கொஞ்சம் சினம். "பேய்ப் பெண்ணே!" - என்று அவள் நெஞ்சில் தைக்குமாறு அழைக்கிறாள். அழைத்து, 'சிறகடித்துக் கொண்டுத் தன் பேடைகளுடன் குருவிகள் 'கீச்சு கீச்சு' என்று இனிமையாய் சப்திக்கின்றனவே. விடியற்காலையில் எழும் அச்சத்தமே பொழுது புலர்ந்ததைக் குறிக்குமன்றோ!" என்று அடையாளம் காண்பித்த பின்னரும் கூட அவள் எழவில்லை; திரும்பிப் படுத்துக் கொண்டாள். முன்னே கூறிய அடையாளத்தை உறுதிப்படுத்த எண்ணி பொழுது புலர்ந்து வருவதற்கான இரண்டாவது ஆதாரத்தைக் காண்பிக்கிறாள் கோதை. "இன்னும் நம்பிக்கை வரவில்லையா? கைவளையல்கள் குலுங்க, கழுத்தில் காசு மாலைகள் கலகலக்க ஆய்ச்சியர்கள் - இடைச்சியர்கள் தயிர் கடைகிறார்களே அந்த சத்தம் கூடவா செவியில் விழவில்லை!" என்கிறாள்.

'பாடவும் நீ கேட்டே கிடத்தியோ?' என்ற வினாவில், நாங்கள் பாடுவது உனக்குத் தாலாட்டுப் பாடுவது போலிருக்கிறதா' என்ற குறிப்பும் தொனிக்கிறது. எதிர்த்து நின்ற தம் விரோதிகளை அழித்தொழித்து தர்மத்தை - நீதியை - நிலைநாட்டிய கண்ணனை "கேசவன்" 'நாராயணன் மூர்த்தி கேசவன்' என்று இயம்புகிறாள்.

சினத்துடன், முதலில் 'பேய்ப்பெண்ணே' என்ற அழைத்து, 'நாயகப் பெண்ணே' என்றும், இறுதியில் சற்றுப் பிரியத்துடன் 'தேசமுடையவளே - பிரகாசமுள்ளவளே' என்றும் அழைத்து 'இந்த இருள் தீர உன் ஒளி வாய்ந்த பிரகாசிக்கும் முகத்தைக் காட்ட, கதவைத் திற' என்று அழைக்கிறாள். 'பரத்வாஜ பக்ஷி' என்றும் 'ஆனைச் சாத்தன்' என்றும் வலியன் குருவியை அழைப்பர். பகவத் விஷயத்தைக் காட்டிலும் பாகவத விஷயம் சிறந்தது என்பதை அறிந்தும் மறந்திருப்பவரை எழுப்புவது இப்பாசுரத்தின் உட்கருத்து ஆகும்.

" எம்பிரானை எந்தை தந்தை தந்தைக்கும்
தம்பிரானைத் தண் தாமரைக் கண்ணனைக்
கொம்பு அராவுநுண் நேர்இடை மார்பனை
எம்பிரானைத் தொழாய் மட நெஞ்சமே!"

என்று நம்மாழ்வார் அறிவுறுததலுக்கேற்ப சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாளும் இறைவனைப் பாடி இன்னல்களை அழித்தொழித்துப் பேரின்பத்தினைப் பெற்றிடுவோம் பகவான் திருவருளினாலே' என்று அழைக்கிறாள் உலக உயிர்களை.

# தேவாதி தேவனே!

"திருமாலின் திருவவதாரமாய்த் திகழும் ஸ்ரீ கண்ண பிரானால் விரும்பப்படக் கூடிய திருநிறைமங்கையே! எம் பாவையே! கீழ்வானம் வெளுக்கத் துவங்கி விட்டது. தொழுவத்திலிருந்து விடுபட்ட எருமைகளும், வெண்முத்துப் பனித் துளிகள் நிறைந்த பசும்புற்களை மேய புறப்பட்டு விட்டன. விடியற் காலையில் ஸ்நானம் செய்யப் புறப்பட்ட, மற்ற நங்கையர்ச் செல்வங்களையும் முன்னமேயே போகாமல் தடுத்து நிறுத்தி, அவர்களுடன் உன்னையும் அழைத்துச் செல்ல நிற்கின்றோம் வெளியே. ஆகவே, சீக்கிரம் எழுந்து வருக.

ஸ்ரீ கண்ணனுடைய அன்பையும்-அருளையும்-கருணையையும் பாடி, தியானித்து, நோன்பிற்கு-அவனிடம் பறையை வேண்டிக் கொண்டு,

அகோரக் குதிரை வடிவமாக, மாய்க்க வந்த அசுவநெடு அசுரனின் வாயைப் பிளந்து அவனையே அழித்தவனும், கம்ஸனால் ஏவப்பட்ட காணுரன், முஷ்டிகன் என்ற மல்லர்களை மாய்த்தவனுமான தேவர்களுக்கெல்லாம் ஆதிதேவனாகத் திகழும் ஸ்ரீ கண்ணபிரானின் திருவடிகளைத் தொழுது சேவித்தால், 'ஆஹா' வென்று உளம் மகிழ்ந்து, ஆராய்ந்தறிந்து அருள் புரிவான். எனவே விரைவில் எழுக" என்று ஸ்ரீ கோதை மணிக் கதவம் அன்ன இதயக் கதவைத் தட்டி எழுப்புகிறாள்.

கீழ்வானம் வெள்ளென்று, எருமை சிறுவீடு
மேய்வான் பரந்தன காண் மிக்குள்ள பிள்ளைகளும்
போவான்போ கின்றாரைப் போகாமல் காத்துன்னைக்
கூவுவான் வந்து நின்றோம், கோது கலமுடைய
பாவாய்! எழுந்திராய்! பாடிப்பறை கொண்டு
மாவாய் பிளந்தானை, மல்லரை மாட்டிய
தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்
ஆவாவென்று ஆராய்ந்து அருளேலோ ரெம்பாவாய்.

'அனைவரும் திரண்டு வந்து அழைக்க வேண்டும் இவளை' என்று கூறும்படி, ஸ்ரீ கண்ணனுடைய கருணைக்கு மிகவும் பாத்திரமானவள்-என்பதை வலியுறுத்துகிறது 'கோதுகலமுடைய பாவாய்' என்னும் சொற்றொடர். சம்ஸ்கிருதச் சொல்லான 'கௌதூஹலத்'தின் விகாரம் 'கோதூகலம்.' ஆசை-அன்பு-பிரியம் என்று பொருள்-அதாவது ஸ்ரீ கண்ணனுடைய ஆசை.

மேய்ச்சலுக்குத் தினமும் பசுக்களையும் காளைகளையும் அனுப்புவார்கள் அவற்றை வைத்திருப்பவர்கள். ஆனால் அதற்கும் முன்னமேயே ஆயர்கள் தத்தம் எருமைகளை கொட்டகைகளிலிருந்து அவிழ்த்து விட்டு விடுவர் அதிகமாய்ப் பால் கறக்க வேண்டும் என்பதற்காக, பனிப்புல் மேயும் பொருட்டு. இதனையே 'எருமை சிறு வீடு மேய்வான் பரந்தன காண்' என்கிறாள் ஸ்ரீ கோதை. பனிப்புல் மேய கிழக்கு வெளுக்கையில் வெளியே அனுப்பப்பட்ட எருமைகளை சிறிது நேரத்தில் அழைத்து வந்து பால் கறப்பார்கள். அங்ஙனம் கறந்த பின்பு பகலெல்லாம் மேய்ந்து வரும்படி மேய்ச்சற்காடுகளுக்கு-எருமைகளை அனுப்பி விடுவார்கள். இதை எண்ணியே பனிப்புல் மேய்கையைச் "சிறு வீடு" என்கின்றனர்.

கண்ணனை எப்படியும் அழித்தொழிப்பது என்று வைராக்கியம் கொண்டான் கம்ஸன். தத்தித் தவழ்ந்துத் தளர் நடையிடும் பருவத்திலேயே மாய்த்து விடுவது நல்லது என உணர்ந்து 'அவன்', அனுப்பிய அரக்கியை முலை வழியே அவள் உயிரைக் குடித்து அவளை அழித்துவிட்டான்.

மீண்டும் இதை உணர்ந்த கம்ஸன்-சகடாசுரனை அனுப்பினான். அவனும் அழிந்தொழிந்தான். மீண்டும் அசுவாசுரனையும், மல்லர்களையும் அனுப்பினான். அவர்களும் போரிட்டு அழிந்தொழிந்தனர். இத்தகு வீரப்பண்புகளை - வாயார - மனமார-பாடித் தியானித்தோமானால் 'அவன்' கருணை கொண்டு அருள் புரிவான். இக்கருத்தினையே நம்மாழ்வார் குறிப்பிடுகிறார்.

"ஆழியான் ஆழி அமரர்க்கும் அப்பாலான்
ஊழியான் ஊழி படைத்தான் நிரை மேய்த்தான்
பாழிஅம் தோளால் வரை எடுத்தான் பாதங்கள்
வாழிஎன் நெஞ்சே மறவாது வாழ் கண்டாய்."

என்று கூறிப் போற்றுகிறார். 'ஸத்வ குணம்' தலையெடுப்பதே 'கிழக்கு வெளுத்தது' என்பதன் உட்கருத்து ஆகும். அவ்வாறே 'எருமை சிறு வீடு மேய்வான் பரந்தன காண்' என்பதற்கு தமோ குணங்கள் விலகிப் போவதைக் குறிக்கும். அஞ்ஞானத்திலிருந்து விடுபட்டு-எழுந்து ஞானப் பேரொளியாய்த் திகழும் பகவானைத் தொழுதோமானால் துன்பங்கள் துயரங்கள் விலகும்.

## திருமலை திருப்பதி தேவஸ்தானம்

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்

இவ்வுலகில் ஏழைகளுக்கு உணவு இடுதலைவிட வேறு எந்தவிதமான தர்மமும் சிறந்தது இல்லை. அதிலும் திருவேங்கடவன் குடி கொண்டிருக்கும் திருமலையில் யாத்திரிகளுக்கு இலவசமாக உணவு வழங்குதல் மிகவும் அருளுடையது. இவ்வகையில் தி.தி. தேவஸ்தானம், திருமலைக்கு வரும் பக்தர்களுக்கு இலவசமாக "முழுச் சாப்பாடு" அளிக்கும் வகையில் "ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்" ஒன்றினைச் செயற்படுத்தியுள்ளது.

### திட்டம் எப்படி வேலை செய்கிறது

* தேவஸ்தானத்திற்கு ரூ. 10 இலட்சம் அல்லது அதுபோன்று பல மடங்கு நன்கொடை அளிக்கவேண்டும். தி.தி.தே. அத்தொகைக்கு ஈடான தன் பங்கினைச் செலுத்தும். மொத்தத்தொகைக்கு வரும் வட்டித் தொகையிலிருந்து நாள்தோறும் 400 யாத்திரிகர்களுக்கு உணவு வழங்கப்படும்.
* நன்கொடைகள் யாவும் தனிமனிதர்கள், சிறு கழகங்கள், தனியார் நிறுவனங்கள் ஆகியோரிடமிருந்து பெறப்படும்.
* உணவு அருந்தும் கூடத்தில் நன்கொடையாளர்களின் பெயர் முக்கிய இடத்தில் வைக்கப்படும்.

### பயன்களும் உதவிகளும்

* வருடத்தில் மூன்று நாட்களின்போது திருமலையில் நன்கொடையாளர் தன் குடும்பத்தாருடன் இலவசமாகத் தங்கவும், மேலும் அவர்களுக்கு ஹாரத்தியுடன் இலவச தரிசன வசதியும் செய்து தரப்படும்.
* எண் 80 (ஜி) பிரிவின்கீழ் நன்கொடையாளர்கள் வருமான வரிவிலக்குப் பெறுவார்கள்.
* நாள்தோறும் நடைபெறும் இறைவனின் கொலுவு சேவையின்போது நன்கொடையாளரின் பெயரும் கோத்ரமும் வாசிக்கப்படும்.
* இத்திட்டப்பணியினை மேற்பார்வையிடும்வகையில், ஆலோசனைக்குழுவின் உறுப்பினர்களாக நன்கொடையாளர்கள் சேர்க்கப்படுவர்.

இதுவரை கீழ்வரும் நபர்கள் இத்திட்டத்திற்கு நன்கொடை அளித்துள்ளனர்.

1. திரு. எல். வி. ராமய்யா - சென்னை. ரூ. 10 இலட்சம்
2. திரு. மன்சிங்கா - பம்பாய். ரூ. 20 இலட்சம்
3. திரு. ஆர். பி. கோயங்கா - கல்கத்தா ரூ. 10 இலட்சம்
4. திரு. ஈஸ்வர் பிரஸாத் பொத்தார் - கல்கத்தா. ரூ. 10 இலட்சம்
5. திரு. நாட்டுபையா அம்பானி - ரிலையன்ஸ் டெக்ஸ்டைல் இண்டஸ்ட்ரீஸ் - பம்பாய் ரூ. 10 இலட்சம்
6. திரு. பி. எம். கைதான் — கல்கத்தா — ரூ. 10 இலட்சம்.
7. திரு. ஜலான் — கல்கத்தா — ரூ. 10 இலட்சம்.
8. திரு. எம். ஆர். சாப்ரியா அற நிறுவனம் எண் 1 — பம்பாய் — ரூ. 10 இலட்சம்.
9. திரு. ராம்நாத் கோயங்கா — சேர்மேன், இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகைக் குழு — ரூ. 10 இலட்சம்.

மேலும் பல பக்தர்கள் பயன் பெற தாராளமாக உதவுங்கள்.

மேலும் முழு விவரங்களுக்கு :

செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி - 517501. ஆந்திர மாநிலம்.

செயலாட்சித்தலைவர்.

அவதாரிகை :

ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்தை நன்கு, அர்த்த விசேஷங்களுடன், புரிந்து கொள்வதற்கு காரணபூதமாய் இருப்பதுதான் ரகஸ்யத்ரயம் எனப் பெயர் கொண்ட, "திருமந்தரம்," "த்வயம்", "சரமஸ்லோகம்" ஆகிய மூன்று முக்ய சாரதமான மகா மந்திரங்களாகும். இந்த ரகஸ்யத்ரயத்தில் முதலில் உள்ளதான, திருமந்த்ரமாகிய திருவெட்டெழுத்தின் பொருள் சுருக்கத்தை எழுதிய ஆசையின் மிகுதியால் திருமந்திரத்திற்கு அடுத்தபடியாக உள்ள "த்வயத்தின்" பொருள் சுருக்கத்தையும் எழுத தூண்டியதால், எழுத முற்படுகிறேன். குற்றங்கள் அடியேனுடையதும், குணங்கள் ஆசாரியரின் மஹாப்ரசாதமாக ஏற்று வியாசத்தை கடாக்ஷிக்க வேணுமாய் ப்ரார்த்தித்துக் கொள்கிறேன்.

த்வயத்தை விவரிக்கும் நூல்களும், நூலாசிரியர்களும் :

பரமாசாரியரான ஸ்ரீ ஆளவந்தார், 65 ஸ்லோகங்கள் கொண்ட, "ஸ்தோத்ர ரத்னம்" என்று பெயர் பூண்ட ஒரு ஸ்தோத்ரம் ஒன்றினை அருளிச் செய்துள்ளது த்வயத்தின் விவரணமே என்று பூர்வாச்சாரியாகளனைவரும் நிர்வசனம் செய்துள்ளனர். தர்சன ஸ்தாபகராகிய ஸ்ரீ பகவத் ராமானுஜரின் "ஸ்ரீரங்கத்யம்", "சரணாகதிகத்யம்", "ஸ்ரீ வைகுண்ட கத்யம்" என்ற கத்ய த்ரயமும், த்வயத்தின் அர்த்த விசேஷங்களை விவரிக்கும் க்ரந்தங்களாகும் என்று நம் முன்னோர்கள் அனுஸந்தானம் செய்துள்ளனர். பரம காருணிகரான ஸ்ரீ பிள்ளை லோகாசாரியர், "முமுக்ஷுப்படி" என்ற தமிழ் ஸூத்ரங்களாலாகிய ஒரு சிரேஷ்டமான க்ரந்தத்தில், அனைவரும் நிர்வாஹம் செய்துள்ளனர். தீர்க்க சரணாகதியை ப்ரதிபாதிக்கும் திருவாய்மொழிக்குத் திருக்குருகைப் பிள்ளான், ஆறுயிரப்படியாக ஒரு வ்யாக்யானமும், ஸ்ரீ பட்டர் பேரருளால் வேதாந்தியான நஞ்ஜீயர் ஒன்பதினாயிரப்படி என்ற ஒரு வியாக்யானமும், நம்பிள்ளையினடத்தில் கேட்ட அர்த்த விசேஷங்களை எல்லாம் பெரியவாச்சான்பிள்ளை, இருபத்துநாலாயிரப்படி என்ற ஒரு வியாக்யானமும், வடக்குத் திருவீதிப் பிள்ளையும், தாம் பிள்ளையினிடம் கேட்ட திருவாய்மொழியில் அர்த்தங்களைக் கேட்டது கேட்டபடியே, பட்டோலைக் கொள்கையால், ஸ்ருதப்ரகாசிப்ரக்ரியையாலே, ஈடு முப்பத்தாறாயிரப்படி என்ற ஈடும், தவிர வாதிகேஸரி அழகிய மணவாள ஜீயர் ஸப்தார்த்தம் விளங்கும்படியாக, பன்னீராயிரப்படி என்ற வ்யாக்யான

# த்வயத்தின் பொருள் சுருக்கம்

ஜகத்ரக்ஷகனாகிய திருமாமகள் கேள்வன், திருமாமணி மண்டபத்தில், தேவியாகிய பெரிய பிராட்டிக்கு, திருமந்த்ரமாகிய திருவெட்டெழுத்தின் பொருளை செய்கையிலும் காட்டிக்கொடுத்து ஒப்புயர்வில்லாத, மந்த்ரரத்னமாகிய "த்வயத்தை" உபதேசித்தருளினன்.

மந்த்ரோபதேசம :

இந்த த்வயமந்த்ரமும், ஸதாசாரியன் மூலமாக உபதேசம் பெறவேண்டிய ரகஸ்ய மந்த்ரமாக நம் பூர்வாசாரியர்கள் நிர்ணயம் செய்துள்ளனர். எனவே த்வயமும், திருமந்த்ரத்தைப் போலவே, குரு சிஷ்யக்ரமத்தில், உபதேசிக்கப்படுகிறபடியாலும், ஆசாரியனும் தகுந்த சிஷ்யனாய், பாத்ரமறிந்தே ரகஸ்யத்ரயங்களையும், இதன் அர்த்த விசேஷங்களையும் உபதேசிக்கவேணும் என்று பூர்வர்கள் கூறியுள்ளனர்.

69 ஸூத்ரங்களாக 'த்வயப்ரகரணம்' என்று அருளிச் செய்துள்ளார். ஸ்வாமி நிகமாந்த மஹாதேசிகரும் த்வயத்தில் அர்த்தவிசேஷங்கள் ப்ரதிபலிக்கும்படியாக, வடமொழியிலும், மணிப்ரவாள நடையிலும் சரணாகதி தீபிகை, ந்யாஸ திலகம், ந்யாஸதசகம், ஸ்தோத்ர ரத்னபாஷ்யம், ரகஸ்ய ரக்ஷை, சுளகம், ரகஸ்ய மாத்ருகை முதலிய நூல்கள் அருளிச் செய்துள்ளார். தவிர 32 அதிகாரங்களைக் கொண்ட "ரகஸ்யத்ரயஸாரம்" என்ற மணிப்ரவாள நடையிலுள்ள நூலில், 28 வது அதிகாரம் த்வயாதிகாரமாக ஸ்வாமிதேசிகன் அருளிச் செய்துள்ளார்.

ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களில், நம்மாழ்வாருடைய திருவாய்மொழியாவது த்வயார்த்தமாய் தீர்க்கசரணாகதியை ப்ரதிபலிப்பதாய் உள்ளது என்று பூர்வாச்சாரியர்கள் மும் இது தவிர பிற்காலத்தில் பெரிய பரகாலஸ்வாமி முதலியோரும் திருவாய்மொழிக்கு—வியாக்யானமும் அருளிச் செய்திருப்பதிலிருந்து, த்வயத்தில் விவரணமாய் விளங்கும் திருவாய்மொழியின் சீரிய ஏற்றம் தெளிவாக விளங்கும்.

இனி த்வயத்தின் பொருள் சுருக்கத்தைக் காண்போம் :

---

திரு. டி. கேசவ அய்யங்கார்—அல்லூர்.

---

" ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம: "

என்பதுதான் த்வயம்.

"அஹோ த்வயஸ்ய மஹாத்மியம்
அஹோ வீர்யம், அஹோபலம் !
மந்த்ர ரத்னம் சுபகரம்
வேதஸாரம் ஸநாதநம் " !

என்பது லக்ஷ்மியின் பதி என்றும், அடையாளத்தாலும், நாராயணன் என்று சொல்லாலுமே வேதங்களில் உயர்ந்த தத்வம் இது என்று தீர்மானமாகக் கூறப்பட்டுள்ளது. பெருமாளைச் சரணாகதி (ப்ரபத்தி) செய்யும் போது பிராட்டியை புருஷாகாரமாகக் கொண்டு, எப்போதும் லக்ஷ்மியுடன் கூடவே பிரியாமல், சேர்த்தியாகிய மிதுனத்தை அடைய வேணும் என்று ஸ்ரீமத் என்ற சொல் த்வயத்தில் முதல் பாதியில் காட்டுகிறது என்பர். ஸ்ரீ என்ற வார்த்தைக்கு ஆறு விதமான அர்த்தங்கள் கூறப்பட்டிருக்கிறது. இங்கு லக்ஷ்மி ஸம்பந்தம் என்னுமல் ஸ்ரீ சம்பந்தம் என்று கூறப்பட்டிருப்பதற்குக் காரணமாவது:- ஸ்ரீ என்ற சொல்லை செய்வினையாகவும், செயப்பாட்டு வினையாகவும் ஆக இருவிதமாகப் பொருள் கொள்ளலாம். ஸ்ரீ : ஞ்சேவாயாம் என்ற தாதுவின் வித்யுத்பத்தியாலே, 1. ஸ்ரயத இதிஸ்ரீ என்றும் 2. ஸ்ரீயதே இதி ஸ்ரீ : என்று இருவிதமாக பொருள் கொள்ளலாம். முதலில் செய்வினைப்படி பொருளாவது : ஸ்ரயத இதிஸ்ரீ என்றுல் அவனை நித்யமாக சேவிக்கிருள்; இதனுல் இவள் அவனைவிட்டுப் பிரியாத நிலை வெளியாயிற்று. இரண்டாவது செயப்பாட்டு வினையின்படி பொருளாவது : ஸ்ரியதே இதி ஸ்ரீ : சேதனர்களால் நித்யமாக சேவிக்கப்படுகிருள். இதனுல் இவளுக்கும், சேதனர்களுக்கும் உள்ள நித்ய ஸம்பந்தம் வெளியாயிற்று. ஆக இவ்விரண்டு அர்த்தங்களாலும், பிராட்டிக்கு அகாரத்தில் ஸம்பந்தம் உள்ளது போல்,மகாரத்திலும் இருக்கிறது என்பதை வெளிப்படுத்துவதற்காகவே லக்ஷ்மீ என்று சொல்லாமல், ஸ்ரீ: என்று சொல்லப்பட்டிருக்கிறது என்று தெரியவருகிறது.

உபாயம், உபேயம், புருஷாகாரம் ஆகிய மூன்றும் "ஆசாரத்ரயம்" எனப்படும். இம்மூன்றும் பிராட்டிக்கும் உண்டு. அவரும் உபாயமாகவும், உபேயமாகவும் இருப்பதுடன், சேதனர்க்கும், ஈஸ்வரனுக்கும் இடையில் புருஷாகாரமாக இருக்கிருள் என்பதையும் தெரிவிக்கிறது.

இனி ஸ்ரீ: என்ற சொல்லின் ஆறுவித அர்த்தங்களாவது :

1. தன்னை கடைத்தேறச் செய்ய வேண்டுமென்று விரும்புகிறவர்களால் ஆஸ்ரயிக்கப்படுகிருள் என்பது.
2. இவர்களைக் கடைத்தேறச் செய்ய பிராட்டி, எம்பெருமானை விட்டுப் பிரியாமல் இருக்கிருள் என்பது புருஷாகாரமாக இருக்கிருள் என்பதாகும்.
3. சேதனர்களின் வார்த்தைகளைக் கேட்கிருள்.
4. சேதனர்களின் வார்த்தைகளைக் கேட்கும்படி செய்கிருள்.
5. ப்ரபத்தி செய்தவர்களின் எல்லா குற்றங்களையும் போக்குகிருள்.
6. குணங்களால் அடுத்தவர்களுக்கு, எம்பெருமானுடைய கைங்கர்யம் பெற வேண்டியதற்கேற்ற குணங்களை உண்டாக்குகிருள் என்று ஆக ஆறுவிதமான அர்த்தங்கள் கூறப்பட்டுள்ளன.

கூரத்தாழ்வான், ஸ்ரீ பட்டர், பெரியவாச்சான் பிள்ளை முதலான பூர்வாச்சாரியர்களும் ஸ்ரீ என்ற சொல் மங்களமானவள் என்று குறிக்கும் என்று கூறியுள்ளனர். ஸ்ரீமாந் என்று பொதுவாக கூறினுலும், பிராட்டிக்கு நாதன் என்றும், அவளை விட்டு என்றும் பிரியாதவன் எம்பெருமான் என்பதுதான் பொருள். இக்கருத்தையே நம்மாழ்வார் திருவாய்மொழியில் "அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா" என்ற பாசுரத்தில் அருளிச் செய்துள்ளார். தவிர இப்பாசுரமே த்வயத்தின், பூர்வ வாக்யார்த்தானுஸந்தான ரூபம் என்று பூர்வாசாரியர்கள் நிர்வசனம் செய்துள்ளனர்.

மந்த்ர ரகஸ்யம் திருமந்த்ரம், விதி ரகஸ்யம் சரமஸ்லோகம், அனுஸந்தான ரகஸ்யம் த்வயம் என்பது முன்னோர் வாக்கு. இம்மூன்று ரகஸ்யங்களின் அர்த்த விசேஷங்களை, ஆழ்வார் திருவாய்மொழியில் நான்கு ப்ரபந்தங்களாக வெளியிட்டுள்ளார்.

இனி நாராயண பதத்திற்குத் திருமந்த்ரத்தில் சொல்லப்பட்ட அர்த்த விசேஷங்கள் யாவும் இங்கும் பொருந்துவதாகும். ஏற்கெனவே நாராயண பதத்தில் பொருள் சுருக்கத்தை, திருவெட்டெழுத்தின் பொருள் சுருக்கத்தில் தெரிவித்துள்ளபடியால் இங்கு விவரிக்கப்படவில்லை.

(அடுத்த இதழில் முடியும்)

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசீயமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D.) அல்லது 'பேயார்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிருர்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்ருேம்.

# ஷண்மதமும் முத்துஸ்வாமி தீக்ஷதரும்

8

ஷண்மதத்தில் அடுத்து வருவது சாக்தம் என்கிற சக்தி வழிபாடு. ஆதிசங்கரர் தோன்றுவதற்கு முன்னமேயே பாரத புண்ய பூமி முழுவதும் சக்தி ஆராதனை இருந்திருக்கிறது. தக்ஷயக்ஞத்தில் தன் உயிரை மாய்த்துக் கொண்ட தாக்ஷாயணியின் உடலை சிவன் சுமந்து மிக துயரத்தில் திரிந்து கொண்டிருப்பதைப் பார்த்த மஹாவிஷ்ணு துயர் நீங்குவதற்காக அந்த சக்தியின் உடலை சக்ராயுதத்தால் துண்டுத் துண்டாக வெட்டும்பொழுது அந்தத் துண்டங்கள் 51 இடங்களில் விழுந்ததாகவும், அவைகளே 51 சக்தி பீடங்களாக பாரதம் முழுவதும் அமைந்தன என்றும் புராணங்கள் கூறுகின்றன. ஜ்வாலாமுகி, க்ஷீரபவானி, சிந்தபூரணி, வைஷ்ணவீதேவி, காசி, பிரயாக், ஹரித்துவார், பத்ரிநாத், நேபாளம், காஞ்சி, திருவாரூர், திருவாரூர், திருவானைக்கா, மதுரை, திருக்குற்றாலம், மைசூர்; சிருங்கேரி, சோட்டாணிக்கரா, கொடுங்காளூர் முதலிய சக்தி பீடங்கள் முக்கியமானவை; புராதனமானவையும்கூட.

திரு. எஸ். பார்த்தசாரதி,

போளூர்.

சக்தி வழிபாடு இருவகைப்படும். அக வழிபாடு, புறவழிபாடு. அக வழிபாட்டில் பூஜையின் வெளித் தோற்றங்கள் கிடையாது. ஞானம் முழுமை பெற்ற மனிதன் எந்த பலனையும் எதிர்பார்க்காமல் யோகத்திலாழ்ந்து தன் உடலிலிருக்கும் குண்டலினி சக்தியை விழிப்படையச் செய்து அடிப்பாகத்திலிருக்கும் மூலாதாரம் என்கிற ஸ்தானத்திலிருந்து கிளம்பி சுஷும்னு நாடி வழியாக ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநுகதம், விசுத்தி, ஆக்ஞா என்கிற மற்ற ஐந்து ஸ்தானங்களை படிப்படியாக உயர்நோக்கி அடைந்து நடுநடுவே இருக்கும் பிரம்மக்ரந்தி, விஷ்ணுக்ரந்தி, ருத்ரக்ரந்தி என்கிற முடிச்சுகளைக் கடந்து சிரசிலிருக்கும் ஸஹஸ்ரதள கமலமான சிவனிடம் இச்சக்தி ஐக்யமாகும்பொழுது எல்லா விதத்திலும் பூர்ண ஆனந்த மயமான திருப்தியை அடைகிறான். இந்த உபாசனைக்கு சோடசாக்ஷரி மந்திரம் சொல்லப்பட்டிருக்கிறது. சக்தியின் புறவழிபாட்டு முறையில் முக்கிய இடம் பெறுவது ஸ்ரீசக்ரம் என்கிற வரை படம். இதன் கன பரிமாணத் தோற்றமே மேரு என்பது. இரண்டும் ஒன்றே. ஸ்ரீசக்ரத்தின் அமைப்பில் முதலாவதாக நான்கு வாயில் கொண்ட பூரம் என்கிற சதுர வடிவமான சுவர்கள். இதற்கு த்ரைலோக்ய மோஹன சக்ரமென்றும், இதில் இருக்கும் 28 சக்திகளுக்கு பிரகடயோகினிகள் என்றும் கூறுவார்கள். இதற்கு முதல் ஆவரணம் (சூழ்ந்திருக்கும் நிலை) என்று பெயர். அடுத்து 16 தாமரை புஷ்ப இதழ்கள் போன்று இருக்கும் ஸர்வாசாபரிபூரக சக்ரமென்கிற இரண்டாவது ஆவரணம். இதில் 16 குப்த யோகினிகள் வசிக்கிறார்கள். மூன்றாவது ஆவரணம் 8 புஷ்ப இதழ் கொண்ட ஸர்வ சம்க்ஷோபண சக்ரமென்கிற 8 குப்ததரயோகினிகள் இருக்குமிடம். அடுத்து 14 கோணத்தையுடைய சர்வசௌபாக்யதாயக சக்ரம். இந்த நான்காவது ஆவரணத்தில் வசிப்பவர்கள் 14 சம்ப்ரதாய யோகினிகள். ஐந்தாவதாக சர்வார்த்த சாதக சக்ரமென்னும் 10 வெளிக் கோணங்கள் கொண்ட 10 குளோத்தீர்ணயோகினிகளின் இருப்பிடம். பிறகு 10 உள் கோணங்கள் கொண்ட ஆறாவது ஆவரணமாகிய ஸர்வ ரக்ஷகா சக்ரமாகும். இதில் 10 நிகர்ப்ப யோகினிகள் வசிக்கிறார்கள். அடுத்து ஏழாவது ஆவரணம் 8 திக்கு கோணமுடைய ஸர்வரோக ஹர சக்ரம். இதில் 8 ரகஸ்ய யோகினிகள் இருக்கிறார்கள். எட்டாவது ஆவரணத்தில் த்ரிகோண வடிவத்தில் ஸர்வசித்திப்ரதசக்ரத்தில் 3 ரகஸ்ய யோகினிகள் வசிக்கிறார்கள். கடைசியாக பிந்து என்கிற புள்ளியில் ராஜராஜேஸ்வரி என்ற பெயருடன் ஜகன்மாதா கொலு வீற்றிருக்கிறாள். இந்த ஒன்பதாவது ஆவரணத்திற்கு ஸர்வாநந்தமய சக்ரமென்றும், இங்கு சக்தி பராபர: ரஹஸ்ய யோகினியாக விளங்குகிறாள் என்பதும் கருத்து. அம்பிகைக்கு கன்னிப் பருவத்தில் "பாலா" என்ற பெயரும்; குமரியாக "புவனேஸ்வரி" என்றும் முப்பது வயதுடன் "லலிதா" என்றும், ஜகன்மாதாவாக "ராஜராஜேஸ்வரி" என்றும், துஷ்டர்களை சம்ஹாரம் செய்யும்பொழுது "துர்க்கை"யாகவும் இருப்பதாக ஐதீகம். பிராம்மி, வாராஹி, மாஹேசுவரி, வைஷ்ணவி, ஐந்திரி, சாமுண்டி கௌமாரி இவர்கள் துஷ்டநிக்ரஹத்துக்காக ஏற்பட்ட சக்தியின் சப்த மாதாக்கள். ஆதிசங்கரர் தோன்றுவதற்கு முன் சக்தி பூஜை தந்திர மார்க்கத்தில் துஷ்பிரயோகப்பட்டு வந்தது. அதாவது இல்லாமையை

இருப்பதுபோல் காட்டுதல், கண்களுக்குப் புலப்படாமல் இருத்தல், ஆகாயத்தில் சஞ்சரித்தல், பிறர் பொருளை கவருதல் போன்ற கௌள மார்க்கம் என்று சொல்லப்பட்ட கெட்ட காரியங்களுக்கு மது மாம்சம் இவைகளை சக்திக்குப் படைத்து, சக்தியை வழிபட்டார்கள். சங்கரர் இவைகளை அகற்றி, ஸ்ரீ சக்ரத்தை சத்பூஜைகளால் ஆராதிக்குமாறு செய்தார். அவர் இயற்றிய சௌந்தர்யலகிரி கீர்த்தனைகளாலும் சப்த தசிபாராயணம்,குத்து விளக்கு பூஜை இவைகளால் தற்காலம் தேவியை பூஜிப்பது எல்லோரும் அறிந்த விஷயம். வங்காளத்தில் நவராத்ரியின் போது சிறப்பாக பெருமளவில் அம்பிகையை வழிபடுதல் இன்றும் நடந்து வருகிறது.

இனி முத்துஸ்வாமி தீக்ஷதரின் சக்தி கீர்த்தனைகளை ஆராய்வோமாக. சுமார் 160 உருப்படிகள் இயற்றியுள்ளார். முதலில் சக்தி க்ஷேத்ராடனத்தைப் பார்ப்போம். காஞ்சி, மதுரை, மாயவரம், திருவாரூர், திருவிடைமருதூர், கும்பகோணம், தஞ்சாவூர், திருவானைக்கா, திருநெல்வேலி, திருவையாறு, காசி முதலிய க்ஷேத்ரங்களில் கொலுவிருக்கும் அம்பிகையின் பல நாமங்களின் பேரிலும் சுமார் 80க்கு மேல் கீர்த்தனைகள் செய்திருக்கிறார். இங்கு ஒரு விசேஷத்தைக் குறிப்பிட வேண்டும். எந்த பாஷைக்கும் ஐ, ஆல், கு, உடன் முதலிய உருபுகள் கொண்ட 8 வேற்றுமைகள் உண்டல்லவா? வடமொழியில் வேற்றுமைக்கு விபக்தி என்று பெயர். ஒவ்வொரு வேற்றுமைக்கும் தனித்தனியாக ஒரு கீர்த்தனை என்றால் 8 வேற்றுமைகளுக்கு 8 கீர்த்தனைகள் ஆகின்றன. இந்த அமைப்பு விபக்தி கீர்த்தனைகள் எனப்படும். ஏனெனில் ஒரு விபக்தி கீர்த்தனையில் கீர்த்தனை பூராவும் அதே விபக்தியில் அமையும். தீக்ஷதர் அபயாம்பிகை, நீலோத்பலாம்பிகை, கமலாம்பிகை, மதுராம்பிகை இந்த நான்கு அம்பாள் பேரிலும் ஒவ்வொன்றிற்கும் 8 விபக்தி கீர்த்தனைகள் வீதம் 32 கீர்த்தனைகள் இயற்றியுள்ளார். இதிலும் கமலாம்பிகையின் வேற்றுமை கீர்த்தனைகள் பூராவும் ஸ்ரீ சக்ரத்தின் நவாவரணங்களாக பாடியிருப்பது தனிச் சிறப்பு.

இனி கீர்த்தனைகளின் உள் சிறப்புக்களைச் சொல்வோம். கேதாரராக 'அம்பிகாயா:' உருப்படியின் சரணத்தில் மனதை அடக்கி மூலாதாரத்திலிருந்து குண்டலினி சக்தியை மேல் நோக்கி கொண்டு போய் சஹஸ்ரதளபிந்துவுடன் இணைக்கும்பொழுது அங்கு அம்பிகை சோபிக்கிறாள் என்பதை விரிவாக விளக்குகிறார். இது சக்தியின் அக வழிபாட்டின் நுட்பமான வர்ணனை. கமலாம்பிகையின் நவாவரண கீர்த்தனைகள் ஒன்பதும் ஸ்ரீ சக்ரத்தின் அமைப்பைப் பற்றித்தான். ஆனந்த பைரவியில் த்ரைலோக்ய மோஹன சக்ரத்தையும் ப்ரகடயோகினிகளையும் வைத்து முதல் ஆவரண கீர்த்தனம் அமைகிறது. சர்வசாரா பரிபூரக சக்ரமும் குப்த யோகினிகளும் கல்யாணிராக இரண்டாவது ஆவரணத்தில் இடம் பெறுகின்றன. சங்கராபரணராக மூன்றாவது ஆவரணம் சர்வசம்க்ஷோபண சக்ரத்தையும் குப்த தர யோகினிகளையும் வர்ணிக்கின்றன. நான்காவதாக காம்போஜி ராகத்தில் ஸர்வ சௌபாக்ய தாயக சக்ரத்தையும் சம்பிரதாய யோகினிகளையும் போற்றுகிறார். ஐந்தாவது ஆவரணமாக பைரவியில் ஸர்வார்த்தசாதக சக்ரமும் குளோத்தீர்ண யோகினிகளும் சோபிக்கின்றன. ஆறில் ஸர்வ ரக்ஷாகர சக்ரமும் நிகர்ப்ப யோகினிகளும் புன்னாக வராளியில் பாடப்படுகின்றன. ஏழாவதாக ஸர்வரோக ஹர சக்ரமும் ரகஸ்ய யோகினிகளும் ஸஹானாராக கீர்த்தனையில் இடம் வகிக்கின்றன. கண்டராக எட்டாவது ஆவரணம் சர்வ சித்திப்ரத


ஓம் சப்த விக்னேஸ்வராய நம:

"வேதோ நித்யம் அதீயதாம்"

"ஸத்யம் அத்வைதம்" "ஸத்யம் அத்வைதம்" "ஸத்யம் அத்வைதம்"

மிக்க அபூர்வமான, மிக்க பிரசித்தி பெற்ற, மிக்க சக்தி வாய்ந்த

"ஓம் சப்த விக்னேஸ்வரர்" "7 வலம்புரி விநாயகர்"

ஆலயம் செங்கல்பட்டு மாவட்டம், மாத்தூர்கிராமம் அருகில், ஓர்கடம் சாலையிலிருந்து 1½ கி. மீ. தூரத்தில், காஞ்சிபுரத்திலிருந்து 34 கி. மீ தூரத்தில், நிர்மாணிக்கப்பட உள்ளது. அன்பர்கள் யாவரும் இந்த தெய்வீகமான புனித கைங்கர்யத்தில் பங்கேற்று, பெருமளவு நிதி உதவி அளித்து தெய்வ காரியத்தை நிறைவேற்றும்படி வேண்டி, விரும்பிக் கேட்டுக் கொள்ளப்படுகிறது.

எல்லாம் நன்மைக்கே! எல்லாம் நல்லதே நடக்கும்!

தங்கள் அன்புள்ள,

B. R. மகாலிங்கம்

அனுப்பவேண்டிய முகவரி : B. R. மகாலிங்கம், D. 16. A. உ. வே. சாமிநாத அய்யர் சாலை, பிளாக் - 27, நெய்வேலி - 607803. தமிழ்நாடு.

சக்ரத்தையும் அதிரகஸ்ய யோகினி களையும் குறிப்பிடுகிறது. கடைசி யாக பிந்துவாகிய ஸர்வாநந்த மய சக்ரத்தில் பராபர ரஹஸ்யயோகினி யாக ஜகன் மாதா மஹாத்ரிபுர சுந்தரியாகவும் ராஜராஜேஸ்வரியாக வும் பெயர் கொண்டு ஆகிரி ராகத் தில் போற்றப்படுகிருள். இந்த ஸ்ரீ சக்ரத்தின் அமைப்புகளை மற்றும் பல கீர்த்தனைகளில் இடத்திற்கு தகுந் தாற் போல் மாற்றி மாற்றி உப யோகப்படுத்தியிருக்கிறார் தீக்ஷதர். "த்ரைலோக்ய மோஹன சக்ரேஸ் வரி", 'ஸர்வாநந்தமய சக்ரவாஸினி' 'சஹஸ்ரதள பத்மஸ்திதே', 'நவசக்ர பிந்து பூடவாஸினி', 'ஸம்பிரதாய குளோத்தீர்ண யோகினீம்' 'த்ரீ கோணுயை', 'சஹஸ்ரதளசரஸீஜ மத்யப் பிரகாசினீ' என்கிற வர்ண னைச் சொற்கள் ஆங்காங்கே காணப் படுகின்றன. மற்றும் கௌரிராக 'கௌரிகிரி ராஜகுமாரி'யில் 'சுவர்ண மணிமயாதி பஞ்ச விம்சதி பிரா காரே' என்று நவரத்னம் முதலிய 25 பிராகாரங்களை உடையவள் தேவி என்கிருர். இதுபோல் லலிதா சஹஸ்ர நாமாவளியில் வரும் 'சிதக்னி குண்ட சம்பூதா', 'ரணத்கிங்கிணி மேகலா', 'கலிகல்மஷ நாசினி', 'சாம் ராஜ்யதாயினி', 'பஞ்சாசத்பீட ரூபிணி', 'சாம்ராஜ்யதாயினி', 'நடேஸ்வரி', 'பாடலிகுசுமப்ரியே', 'சவ்யாபசவ்யமார்க்கஸ்தாயி' முத லிய நாமாக்கள் தீக்ஷதர் கீர்த்தனை களில் இடம் பெறுகின்றன. மற்றும் 'பாலா', 'லலிதா', 'ராஜராஜேஸ்வரி', 'துர்க்கா', 'வாராஹி', 'வைஷ்ணவி' முதலிய அம்பிகையின் உருவ நாமாக் களையும் அழகாகப் புகுத்தியிருக்கிருர். கல்யாணி ராக 'ஸ்ரீ மீனுக்ஷி'யில் காமாட்சி, விசாலாட்சி, மீனுக்ஷி என் கிற முப்பெயர்களையும் சேர்த்திருக் கிருர். த்ரிபுராசுரர்களை வென்றது, சும்ப நிசும்பவதம், விளையாட்டாக பண்ட குமாரர்களைக் கொன்றது, பண்டாசுரவதம், விஷங்கா சுரகணங் களை வென்றது இந்த மாதிரி சம்பவங் களையும் தீக்ஷதர் விட்டுவைக்க வில்லை. மற்றும் சில விசேஷ அம்சங் கள். ரேவ குப்த ராகத்தில் 'சதா வின தசாதரே' என்கிற உருப்படி யில் 'ஜட பரதனுதே' என்கிற ஒரே பதத்தினுல் பாகவதத்தில் ஜட பர தரை திருடர்கள் காளிமுன் நிறுத்தி நரபலி கொடுக்கும் நேரத்தில் காளி யால் காப்பாற்றப்பட்ட நிகழ்ச்சியை விளக்குகிருர். சாமர ராக 'அன்ன பூர்ணே'யில் 'பாயசான்ன பூரித மாணிக்ய பாத்ர ஹேமதர்வி வித்ருத கரே' என்று பாயசான்னத்தால் நிரம் பிய மாணிக்க பாத்திரத்தையும் தங்கக் கரண்டியையும் வைத்திருப்ப தாக அன்னபூர்ணி விக்ரஹத்தை வர்ணிக்கிருர். கமகக்கிரியாராக 'மீனுக்ஷிமேமுதம்' என்கிற பெயர் போன கீர்த்தனையில் மீனுக்ஷி மலய த்வஜ பாண்டியனின் புதல்வி என்று தமிழ்ச் சார்பை சேர்த்திருக்கிருர். 'ஷட்சமயே சமயே' என்று ஷண்மதத் தோடு சேர்ந்திருப்பதை "ஸ்ரீதும் துர்கே' கிருதியில் காட்டுகிருர். 'ஆர்யாம் அபயாம்பாம் பஜரே' என் கிற பைரவி உருப்படியில் 'நந்தன வனோத்பாதனும்......பக்தசேவானும்' என்கிற வசனங்களால் பராசக்தியை பூந்தோட்டம் அமைத்து புஷ்பமாலை களை அணிவித்தல், சந்தனம் அரைத் தல், ஆலயம் கட்டுதல், சுத்தம் செய் தல், ஸ்தோத்திரம் படித்தல், வணங்குதல் முதலிய உபசாரங் களால் திருப்தி செய்து அவள் அருளுக்குப் பாத்திரர்களாகும்படி கேட்டுக்கொள்கிருர்.

இனி 'கௌமாரம்' என்கிற முருகர் வழிபாட்டை எடுத்துக் கொள் வோம். சுப்பிரமணியன், குமரன், கந்தன், கார்த்திகேயன், காங்கேயன், குகன் என்று பல பெயர்களால் பிரிய மாக அழைக்கப்படும் ஆறுமுகனுகிய தமிழ்க்கடவுள் காரணார்த்தமாக அவ தரித்தவர். தக்ஷனுடைய யாகத்தில் கலந்து கொண்டதற்காக தேவர் களுக்குப் பாடம் கற்பிக்க தாரகா


உ
ஓம் சப்த விக்னேஸ்வராய நம:
"வேதோ நித்யம் அதீயதாம்"
"ஸத்யம் அத்வைதம்" "ஸத்யம் அத்வைதம்" "ஸத்யம் அத்வைதம்"

ஓம் சப்த விக்னேஸ்வராய நம:
ஓம் ஸ்ரீ காஞ்சி ஓம் அம்மா ஓம் காமாக்ஷி நம:
ஓம் ஸ்ரீ சங்கர பகவத் பாதாயே நம:

இந்தக்கட்டத்தில் உள்ளதை 108 தடவை எழுதி (யாரும் எந்த மொழியிலும் எப்பொழுதும் எழுதலாம்.) அத்துடன் கூட ரூ. 7/- (ரூபாய் ஏழு மட்டும்) மணியார்டர் மூலம் (by M. O.) கீழ்க்கண்ட முகவரியில் சமர்ப்பிக்கவும்.

புனித பிரசாதமும், வேத ஒளி படமும் அனுப்பப்படும்.

எல்லாம் நன்மைக்கே. எல்லாம் நல்லதே நடக்கும்!

அனுப்ப வேண்டிய முகவரி :
B. R. மகாலிங்கம்,
D-16-A, உ. வே. சாமிநாத அய்யர் சாலை, பிளாக்-27, நெய்வேலி-607 803. தமிழ்நாடு

சுரன், சூரபத்மன் முதலிய அரக்கர்கள் சிருஷ்டிக்கப்பட்டார்கள். தேவர்கள் திருந்திய பிறகு அரக்கர்களை ஒழிப்பதற்காக சிவனுடைய நெற்றிக் கண்ணிலிருந்து தீப்பொறிகள் உண்டாகி கங்கை மூலமாக சரவணப் பொய்கையில் சேர்க்கப்பட்டு அங்கு ஆறு குழந்தைகளாக மாறி கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்டு பார்வதியின் அணைப்பால் ஒன்று சேர்க்கப்பட்டு 6 முகங்களும் 12 கைகளும் ஓர் உடலுடனும் கூடிய உருவத்துடன் தோன்றினார் ஆறுமுகன் என்று கந்த புராணம் வர்ணிக்கிறது. இவருடன் பார்வதியின் பாத சிலம்புகளிலிருந்து நவகன்னிகைகள் உருவாகி அவர்கள் சூல்கொண்டு நவ நந்தனர்கள் என்று சொல்லப்பட்ட ஒன்பது சூரர்களாக அவதரித்து முருகனுடன் துணையிருந்து அசுரர்களை ஒழிக்க உதவி புரிந்தார்கள். தாராகாசுரனை அழித்து சூரபத்மனை அழிக்காமல் அவனைத் தன் வாகன ரூபமாக மயிலாகவும் சேவல் கொடியாகவும் மாற்றிக் கொண்ட பெருமைமிக்க கடவுளாவார் முருகன். உடன் இந்திரன் மகளாகிய தெய்வயானையையும், வேட்டுவப் பெண் வள்ளியையும் மணந்து கொண்டவர். இவருடைய சிறப்புச் செயல்களில் பிரமனுக்கும் சிவனுக்கும் பிரணவ மந்திரத்தின் அர்த்தத்தை வெளிப்படுத்தியது முக்கியமானது. மனிதர்களால் அனுஷ்டிக்கப்படும் கிருத்திகை விரதம், சஷ்டி விரதம், காவடி தூக்குதல், சரவணபவ மந்திர மோதல், மாவிளக்கு ஏற்றுதல் இவைகள் இவருக்குப் பிரியமானவை. துஷ்டர்களைத் தண்டித்து நல்லோர்களைக் காக்கவே இவருடைய வேல் ஏற்பட்டிருக்கிறது என்பதற்காக பக்தர்கள் அதற்கு தனி மஹிமை தருகிறார்கள். தமிழ் நாட்டில் பல இடங்களிலும் முருகன் கோயில்கள் இருந்த போதிலும் ஆறு படை வீடுகள் என்று அழைக்கப்படும் திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், சுவாமி மலை, பழமுதிர்ச் சோலை, பழனி, திருத்தணிகை ஆகிய திருத்தலங்கள் சிறப்பு மிக்கவை. அருணகிரி நாதரின் திருப்புகழ் தமிழ் மணக்கும் முருகன் புகழேயாகும்.

சுப்பிரமணியருக்கும் ஸ்ரீ சக்ரத்தைப் போல யந்திரம் உண்டு. ஓம் சரவணபவ என்கிற ஷடாக்ஷரி மந்திரத்தினால் இந்த யந்திரத்தை அர்ச்சித்தால் பலனடையலாம் என்பது பரவலான கருத்து. இது அருவ வழிபாடு.

கௌமாரத்தை யொட்டி ஸ்ரீமுத்துஸ்வாமி தீக்ஷிதர் சுமார் முப்பது கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். பாக்களில் வரும் முருகன் பெயர்களை எல்லாம் சேர்த்தால் ஒரு நாமாவளியே ஏற்பட்டு விடும். பரமசிவன் குமாரர், பார்வதி புத்திரன், கார்த்திகை பெண்களின் மகன், கந்தன், குகன், குமார ஸ்வாமி, சுப்பிரமணியன், ஸ்வாமி நாதன், வேலாயுதன், சேவல் கொடியோன், தண்டாயுதபாணி, மயில் வாகனன், தேவசேனைத் தலைவன், ஆறெழுத்துடையவன், ஷண்முகன், சரவணபவன், வள்ளி மணாளன், தெய்வ யானையின் கணவன், அசுரர்களை அழித்தவர், பிரணவ மந்திரத்தை உபதேசித்தவர். இந்தச் சொற்களுக்கு நிகராக வடமொழிச் சொற்கள் அமைந்திருக்கின்றன. சுத்த தன்யாசிராக 'சுப்பிரமண்யேன' கீர்த்தனையில் 'அஷ்டாதசலோசனா கண்டேன' என்று முருகருக்கு 18 கண்கள் வைத்துவிட்டார். அதாவது ஒவ்வொரு முகத்திற்கும் மூன்று கண்கள். தகப்பனார் ஜாடை இருக்க வேண்டாமா? தேவக்ரியாராக 'ஸ்ரீகுரு குஹ'வில் 'சுரபதி, ஸ்ரீபதி, ரதிபதி, வாக்பதி, க்ஷிதிபதி, பசுபதி சேவித' என்று இந்திரன், விஷ்ணு, மன்மதன், பிரம்மா, அரசன், பரமசிவன் இவர்களால் பூஜிக்கப்படுபவர் என்கிற பட்டியலைக் கொடுக்கிறார்.

இனித் தத்துவங்களுக்கு வருவோம். பல ஹம்சராக 'குருகுஹாதன்யம் ந ஜானேஹம்' கிருதியில் 'குப்த ஆகமார்த்த தத்வ ப்ரபோதினே' 'வாசிதிதராந்த தத்வஸ்வரூபிணே:' 'சஹஸ்ரதள சரஸிஜ மத்ய நிவாசினே:' 'ஜீவைக்யாத்மனே', 'தஹரவித்யா ப்ரதாயக பரமாதனே', என்கிற பதங்கள் முறையே 'மறைந்திருக்கும் வேத அர்த்தங்களை அறிந்தவர்', பூமி முதல் சிவன் வரையுள்ள 36 தத்துவங்களை உடையவர்', '1000 தாமரை' இதழ் கொண்ட சக்ரத்தின் மத்தியில் இருப்பவர்', ஜீவனோடு ஐக்கியமானவர்', 'தஹர வித்யைக்கு காரணமானவர்' என்கிற அர்த்தங்களைக் கொடுக்கும். 'ஸ்வாமிநாத' என்கிற நாட்ட ராக கீர்த்தனையில் 'பூமி ஜாலாக்னீ வாயுக கன கிரண:' என்று பூமி, ஜலம், அக்னி, வாயு ஆகாசம் ஆகிய பஞ்ச பூதங்களின் ஸ்வரூபமானவர் என்கிறார் தீக்ஷிதர். மற்றொரு இடத்தில் 'ப்ரப்ரவாமாதி பூஜிதபதேன' என்று ப்ரப்ரவாம என்கிற மந்திரத்தால் பூஜிக்கப்பட்டவர் ஸ்கந்தர் எனச் சொல்கிறார்.கமாஸ் ராக 'ஷடானனே' வில் 'ஷட் ஆதாராதி சக்தியாத்மகே', 'ஷட் அங்க ஸ்ருதி விசித்ராத்மிகே', என்று 'ஆறு சக்தியாக இருப்பவர்' 'ஆறு அங்கங்கள் உடைய வேத மூர்த்தி', 'ஆறு கோண மத்தியில் இருப்பவர்' என்று முருகனை எண் 6 உடன் சம்பந்தப்படுத்தி விவரிக்கிறார். ஆனந்த பைரவி ராக 'தண்டாயுத பாணிம்' கீர்த்தனையில் 'சண்டிகேசாவதாரம்' என்று 'முருகன் அவதாரமே சண்டிகேசுவரர்' என்று சொல்லி 'ப்ருத்வியாத்மக கந்தம்', 'ககனாத்மக சும கந்தம்', 'வாயுமய தூபகந்தம்', 'வன்ஹிமய தீபகந்தம்', 'அம்ருதாத்மக ரசகந்தம்' என்கிற பதங்களால் 'பூமி-சந்தனம்; ஆகாசம்-புஷ்பம்; காற்று-தூபம்; அக்னி-தீபம்; நீர்-நைவேத்யம்' என்று பஞ்ச பூதங்களுடைய அங்கன்யாஸ உபசாரங்களைக் கூறுகிறார். இப்பாட்டிலேயே 'பரிபாலித முசுகுந்தம்' என்று முசுகுந்த மஹாராஜனை ஆசீர்வதித்ததும் வருகிறது. ப்ரணவ மந்திரத்தின் அர்த்தம் தெரியாததற்காக பிரம்மனைத் தண்டித்துப் பிறகு அனுக்ரஹித்தது 'அஜ சிக்ஷண ரக்ஷண என்கிற பதத்தால் 'குருகுஹ ஸ்வாமினி பக்திம்கரோமி' என்கிற பாட்டில் குறிப்பிடுகிறார்.

(தொடரும்)

# வால்மீகி திருவுள்ள விளக்கு

ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு

இங்குக் கூறப்பட்ட அஜாயமாநத்வமும் பஹுதா ஜாயமாநத்வமும் (=பிறவாதிருத்தலும் பலவகையாகப் பிறத்தலும்) ஒன்றற்கொன்றுள்ள முரண்பாடு காரணமாக ஓரிடத்தில் சேர்ந்திராவாகையால் பரம புருஷனிடத்தில் கூறப்பட்ட அவ்விரண்டினையும் ஒன்றுக்கொன்று முரண்பாடில்லாமல் பொருந்தும்படிப் பொருள் கூறியே முடிக்க வேண்டியிருப்பதால், பிறவாதிருத்தலென்பதை-ஜீவாத்மாக்களைப் போல் நல்வினை தீவினைகளின் பலனை அனுபவிப்பதற்காக ஏற்பட்ட பிறவியில்லாமையாகவும், பலவகையாகப் பிறத்தலென்பதை-தன் விருப்பத்தின்படியே தன்னை யடைந்தவர்களைக் காத்தலையே பயனாகக் கொண்ட பலவகையவதாரரூபமாகவும் இசைய வேண்டும்; இரண்டிடங்களிலுமுள்ள 'ஜாயமாந' என்ற சொல்லின் பொருளை ஒரே விதமாகக் கொண்டால், பிறத்தலும் பிறவாமையுமாகிய அவ்விரண்டினையும் ஓரிடத்திலுள்ளனவாகக் கூற முடியாமையால் என்க. ஆக இந்த ச்ருதியினால் பகவான் நல்வினை தீவினைகளினாலன்றித் தன்னிஷ்டப்படியே தன்னைப்பற்றிய பக்தர்களுக்காக அவதாரம் செய்கிறானென்பது கூறப்பட்டதாயிற்று.

பகவானுடைய அவதாரம் தன்னையண்டின அன்பர்களைக் காத்தற்காகவே ஏற்பட்டதென்னும் விஷயம் "யோ தேவேப்ய ஆதபதி" என்னும் அடுத்த வாக்கியத்தில் பேசப்படுகிறது. ய:=எந்தப் பரம புருஷன், தேவேப்ய:=தேவர்களுக்காக, ஆதபதி=நன்றாக ஐச்வர்யமென்னும் லக்ஷ்மியோடு கூடியவனாய்ப் பிரகாசிக்கிறானோ. 'தப-ஐச்வர்யே' என்பது தாது. தேவர்களின் விருப்பத்தை நிறைவேற்றுதற்காக எல்லாவிடத்திலும் விளங்குகிறானென்றபடி. அல்லது—ஆதபதி = எல்லாவிடத்திலும் தேவசத்ருக்களான அசுரர் முதலியோரைக் கொளுத்துகிறானென்று கொள்க. 'தப-ஸந்தாபே' என்பது தாது. பகவானுடைய அவதாரத்திற்கு நல்லோரைக்காப்பது போலவே தீயோரையழிப்பதும் பயனன்றோ.

பகவானது அவதாரம் அவனது விருப்பத்தினால் மட்டுமே உண்டாகிறதென்பது, "அஜோऽபிஸந் அவ்யயாத்மா பூதாநாமீச்வரோऽபி ஸந் | ப்ரக்ருதிம்ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாமி ஆத்ம மாயயா" (கீதை 4-6) அர்ஜுநா, நான் பிறப்பும் அழிவும் இல்லாதவனாயினும் பிராணிகளை யடக்கியாளும் ஈச்வரனாயினும், என்னுடையதான அப்ராக்ருதமான திருமேனியை மேற்கொண்டு என் ஸங்கல்பத்தாலே (=பிறக்க வேணுமென்ற விருப்பத்தாலே) பிறக்கிறேன்-என்று பகவத் கீதை நான்காமத்தியாயத்தில் பகவானாலேயே அருளிச் செய்யப்பட்டது. இங்கு 'ஆத்ம மாயயாஸம்பவாமி' என்று தன்னுடைய அவதாரம் தனது 'மாயை' என்று சொல்லப்படும் ஸங்கல்பரூபமான விருப்பத்தினால் உண்டானதென்பது ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டது. மாயா என்ற சொல், 'மாயா வயுநம் ஜ்ஞாநம்' (யாஸ்க நிருக்தம்-தர்மவர்க்கம்-22.)-(மாயை என்பதும் வயுநம் என்பதும் ஜ்ஞாநமேயாகும்-)என்று ஜ்ஞாநத்தைச் சொல்லும் இன்னொரு சொல்லாகப் படிக்கப்பட்டு ஸங்கல்பமாகிற ஜ்ஞானத்தைக் குறிப்பதாகும்.

இங்ஙனமே பகவானுடைய அவதாரத்திற்குப் பயன் தன்னையணுகின பக்தரைக் காப்பாற்றுதலென்பதும் அதே அத்தியாயத்தில் "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே" (4-8) - என்னை யடைந்த நல்லோர்களைக் காத்தற்காகவும் அவர்களுக்குப் பகைவர்களான தீயோர்களை அழித்தற்காகவும் வாட்டமடைந்த வைதிக தருமத்தை நிலை நிறுத்தற்காகவும் ஒவ்வொரு யுகத்திலும் அவதரிக்கிறேன்—என்ற ச்லோகத்தில் அவனாலே அருளிச் செய்யப்பட்டது. இங்கு 'ஸாதூநாம் பரித்ராணாய ஸம்பவாமி' என்றதனால் தன்னுடைய பிறவிக்கு நல்லோரைக் காத்தல் பயனென்று கூறப்படுவது காண்க.

தமிழாக்கம் :
திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.
சிரோமணி வித்வான்
திருப்பதி

இவ்விஷயம் பராசர முனிவராலும் புராண ரத்னமெனப்படும் விஷ்ணு புராணத்தில் ஆறுமம்சம் ஏழாவது அத்தியாயத்தில் 'அந்த பகவான், தனது திவ்யாத்மஸ்வரூபம் ப்ரஹ்மா முதலிய ஜீவாத்மாக்கள் யாகாதி

# இராமாவதாரச் சிறப்பு

இராமாயணத்தில் தந்தைக்கும் மகனுக்கும் உள்ள அன்பு, தாய்க்கும் பிள்ளைகளுக்கும் உள்ள அன்பு, சகோதரரிடையே உள்ள அன்பு, கணவனுக்கும் மனைவிக்கும் உள்ள அன்பு ஆகியவைகளெல்லாம் மிகவும் அழகாக விவரிக்கப்பட்டுள்ளன. ஆனால் எனக்கு இராமாயணம் மிகவும் பிடித்தமாயிருப்பது இவைகள் காரணமாக அல்ல. இராமனுக்கும் குரங்குகளுக்கும் ஏற்பட்ட அன்பு காரணமாகவே எனக்கு இராமாயணம் பிடித்தமாயிருக்கிறது.

இராமனுடைய தன்மை, இனிமை, அன்பு உண்மையில் அவன் குரங்குகளுடன் நட்புரிமைப் பூண்டதில்தான் இருக்கிறது. இராமனிடமிருந்து வானரங்களை அகற்றி விடுவோமானால் அந்த இராமனிடம் இராமனின் அம்சம் எவ்வளவு மிச்சமிருக்கும்! வெறும் வெற்றிடமாகத்தான் காட்சியளிக்கும்! இராமன் வானரங்களிடமும் பரம் பொருளைக்கண்டு அவைகளுடன் அன்பும் உயர்வும் பூண்டான்.

இராமாயணத்தின் இரகசியம் திறவுகோல் இதுவே. இந்தத் திறவுகோலை நாம் மறந்து விட்டால் இராமாயணத்தின் இனிமையை இழந்து விடுவோம்!

தந்தைக்கும் மகனுக்கும் தாய்க்கும் பிள்ளைக்கும் உள்ள அன்பு வேறு இடங்களிலும் கிடைக்கும்; ஆனால் நரனுக்கும் வானரத்திற்கும், மனிதனுக்கும் குரங்கிற்கும் உள்ள இந்த ஒப்பற்ற இனிய நட்பை இராமாயணத்தில் மட்டுமே காண முடியும். வேறு எங்கும் காண முடியாது. இராமாவதாரச் சிறப்பும் அதுவே!

**ஆச்சாரிய விநோபாவின் கருத்துக்கள்.**

**தகவல்: நல்லம்பள்ளி என். ஆர். ஜெயசந்திரன் பி.காம்.,**

நற்கருமங்களென்ற எல்லா சக்திகளையுமுடைய தனது பரமபதத்திலுள்ள அந்தத் திருமேனியை, உலகோர்க்கு உதவி செய்வதற்காகத் தனது லீலையினால், தேவர்களாகவும் மனிதர்களாகவும் விலங்குகளாகவும் தாவரமாகவும் பிறத்தலென்னும் செயலையுடையவைகளான அவதாரத் திருமேனிகளாகச் செய்து கொள்ளுகிறான். அப்பிறவிகள் நல்வினை தீவினைகளென்னும் கருமங்களின் பயனை அனுபவிப்பதற்காக உண்டானவை அல்ல' என்று (காண்டிக்யருக்குக் கேசித்வஜர் கூறுவதாக) ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டது. அங்கு 'ப்ரத்யஸ்தமித பேதம்' (விஷ்ணு பு. 6-7-53) என்ற ச்லோகம் தொடங்கி, யோகிகள் தியானம் செய்யத் தக்க - பரப்ரஹ்மத்தின் திருமேனியைச் சொல்ல ஆரம்பித்த பராசரமுனிவர் ஸம்ஸாரி ஜீவரென்னும் மூர்த்தமாயும் முக்தியடைந்த ஜீவரென்னும் அமூர்த்தமாயுமுள்ள-பகவானுடைய உருவங்களிரண்டினையும் கூறி, எல்லாவிதமான சக்திகளையுமுடையதாய்த் தனக்கே யுரித்தான (பரமபதத்திலுள்ள) திருமேனியையே பகவான் உலகோர்க்கு உபகரிப்பதற்காக தேவ மனுஷ்ய திர்யக் ஸ்தாவர ரூபங்களாக லீலையினால் ஆக்குகிறானென்று கூறுகிறார்.

இங்ஙனம் ஆறுமம்சம் ஐந்தாமத்தியாயத்தில் 'தனது இச்சையினால் கொள்ளப்பட்டவையும் தனக்கு விருப்பமானவையுமாய்ப் பலவகைப்பட்ட அவதாரத் திருமேனிகளையுடையவனும் இவற்றின் மூலமாக எல்லாவுலகங்களுக்கும் நன்மையை உண்டாக்குமவனுமாகிறான் இப்பரமாத்மா' (84) என்றும் கூறுகிறார்.

ஆக இப்படி ச்ருதி கீதா புராணங்களில் ப்ரஸித்தமாய்ப் பரம புருஷனை விஷ்ணுவுக்கே யுரியதாய் அவனது விருப்பத்தினால் மட்டும் உண்டானதாய் பக்தர்களைக் காத்தலையே பயனாகக் கொண்டதுமான அவதாரத்தைச் செய்வதென்பது, ஸ்ரீராமாயணம் பாலகாண்டம் இருபத்தொன்பதாவது ஸர்க்கத்தில் விஷ்ணுவுக்குச் சொல்லப்பட்டு, அது அப்பிரானுக்குப் பரம புருஷத்வத்தைச் சாதிக்கிறது.

அந்த ஸர்க்கத்திலோவெனில், வாமநவடிவோடு விஷ்ணு பகவான் அவதரித்ததற்கு, அவனை யடைந்த தேவர் கணத்தைக் காப்பதே பயனென்பதும், அவன்தன் விருப்பமே அதற்குக் காரணமென்பதும் மிக விளக்கமாகச் சந்தர்ப்பம் முதலியவற்றால் அறியப்படுகிறது. அதில் 'மஹா விஷ்ணு இந்த ஸித்தாச்ரமத்தில் வசிக்குங்காலத்தில் விரோசனனது மகனை பலி என்னும் அரசன் தேவர் கணங்களை இந்திரனோடும் வாயுக்களுடனும் வென்றி கொண்டு மூவுலகிலும் பிரசித்தி பெற்றவனாய் அவற்றில் அரசு செலுத்தினான்' (4) என்று பலி எல்லாத் தேவர்களையும் வென்று மூவுலகங்களையும் ஆண்டதைப் பற்றிக் கூறுவதன் மூலமாக, தேவர்களுக்குத் துன்பமுண்டானமையைச் சொல்லி, 'மகாபலி யாகம் செய்யா நிற்க அக்நியை முன்னிட்ட தேவர்களனைவரும் தாமே வந்து இச் சித்தாச்ரமத்தில் வாழும் விஷ்ணுவினிடம் முறையிட்டனர்' (5) என்று பலியினால் உபத்திரவமடைந்த தேவர்கள் லக்ஷ்மீ நாதனுடைய இருப்பிடம் சென்றமையைக் கூறி, 'ஓ விஷ்ணுவே விரோசனன்மைந்தனை

பலி உயர்ந்த வேள்வியொன்றைச் செய்து கொண்டிருக்கிறுன். அது முடிவு பெறுவதற்குள் உமது காரியத்தை (உம்மைச் சேர்ந்தவர்களான எங்களது காரியத்தை) நன்ருக முடித்துக் கொள்ளும். இப்பலியை யாசிப்பவர் யாவர் யாவர் தேச தேசங்களில் நின்றும் வந்து நிற்கிருர்களோ அவர்களனைவர்க்கும் யாசித்தபடியே எல்லாவற்றையும் வழங்கிக் கொண்டிருக்கிறுன். அத்தகைய (=எமது காரியத்தையும் உமதாக நினைக்கும்) நீரும் தேவர்களின் நன்மைக்காக ஸங்கல்பமென்ற இச்சையுடையராய் வாமன வடிவம் பூண்டு (அவனிடம் சென்று யாசித்து) எங்களுக்கு மங்களத்தை உண்டாக்குவீராக.' (6,7,8) என்று பக்தர்களுக்கு வசப்பட்டவரும் அவர்களது காரியத்தைத் தமது காரியமாக அபிமானிப்பவருமாகிய விஷ்ணுவின் ஸந்நிதானத்தில், அப்பகவான் தன்னிச்சையினுல் வாமநனுக அவதரித்துத் தமது பகையைப் போக்கி அதன் மூலமாகத் தமது விருப்பத்தை நிறைவேற்றித் தர வேணுமென்னும் தேவர்களின் வேண்டுகோளைச் சொல்லி, பின்பு இடையில் 'இவ்வாறு தேவர்கள் விஷ்ணுவை வேண்டிக் கொண்டிருக்கும் போது அக்நியோடொத்த ஒளி படைத்தவரான காசியபர்' (9) என்று தொடங்கி பகவான் வாமநனுக அவதாரம் செய்ததை முன்னுரையுடன் கூறி, பின்பு 'மஹா விஷ்ணு வாமந வேட மேற்றுக் கொண்டு மகாபலியிடம் வந்தார். தான் பெரியவன் என்ற எண்ணத்தை விட்டு மூன்றடி நிலத்தை யாசித்துப் பெற்ருர். உலகிற்கு அந்தராத்மாவாய் எல்லாப் பிராணிகளின் நன்மையில் ஊன்றியவரான அவர் மூவுலகங்களையும் ஆக்ரமித்து மாவலியைத் தமது வலியால் அடக்கி, பேரொளி படைத்த அப்பெருமான் மறுபடியும் அம்மூவுலகங்களையும் இந்திரனுக்கு வசமாக்கினுர்' (18, 19, 20) என்று வாமநரூபந் தரித்த பகவான் திரிவிக்கிரமனுகப் பேருருவந்தரிப்பதன் மூலமாக, தம்மைத் தஞ்சமாகப் பற்றிய தேவர் கணங்களுக்குத் துன்பம் விளைத்த பலியை அடக்கி, அத்தேவர்களின் துன்பம் துடைத்ததனை வருணித்து, இந்திரனுக்கு மூவுலகங்களினுடையவும் அரசுரிமையை வழங்கி அவர்களின் விருப்பத்தை நிறைவேற்றிய விஷயம் தெரிவிக்கப்பட்டது.

இவ்விஷ்ணு புராண ச்லோகங்களில் பகவானுடைய அவதாரத்திற்குத் தம்மையடைந்த தேவ கணங்களின் துயரைத் துடைத்தல் பயனென்பது விளக்கமாகவே தோன்றுகிறது. அத்தகைய அவதாரம் இச்சையினுல் மாத்திரம் உண்டாவதென்பது முற்காட்டிய 'அத்தகைய நீரும் தேவர்களின் நன்மைக்காக மாயா யோகத்தை அடைந்தவராய் - ஸங்கல்பமென்ற இச்சையையுடையராய் வாமந வடிவம் பூண்டு (பலியிடம் சென்று யாசித்து) எங்களுக்கு மங்களத்தை உண்டாக்குவீராக' 'விஷ்ணு பு. 6-5-8) என்ற ச்லோகத்தினுல் விளக்கப்பட்டது; 'மாயா யோகத்தை அடைந்தவராய்' என்ற விடத்தில் மாயை யென்னும் ஸங்கல்பத்தை மறு பெயராகக் கொண்ட இச்சையினுல் வாமநவடிவந்தரித்தமை சொல்லுதல் காண்பதனுல் என்க. 'ஸம்பவாமி ஆத்ம மாயயா' (கீதை-4-6) எனது ஸங்கல்பத்தாலே பிறக்கிறேன்-என்ற பகவத் கீதா வசனத்தினுல் பகவான் அவதரிப்பதற்குக் காரணமாகக் கூறப்பட்ட மாயை என்னும் ஸங்கல்பமே இங்கும் அவதார காரணமாகக் கூறப்படுகிறது; சொல்லாலும் பொருளாலும் இது அந்த கீதா ச்லோகத்தையும் அதன் பொருளையும் நினைப்பூட்டுதலால் என்க.

## உமாபதி சிவத்தை ஆட்கொண்ட உத்தி!

திருப்பெண்ணுகடத்தில் பராசர முனிவர் பரம்பரையில் தோன்றியவர் மறைஞான சம்பந்தர். இவர் நான்மறைகள் கற்றுத் தெளிந்ததோடு அல்லாமல் அருணந்தி சிவாசாரியரிடமும் ஞானுேபதேசம் பெற்றவர். எனவே இவர் "மறைஞான சம்புந்தர்" என்று போற்றி அழைக்கப்படுகிருர்.

தில்லை மூவாயிரவர்களுள் ஒருவர் உமாபதி சிவாசாரியார். வேத நெறியையும் சைவ நெறியையும் போற்றி நாளும் கூத்தப் பெருமானுக்கு வழிபாடு செய்து வந்தார். இவர் ஒருநாள் கோயில் வழிபாட்டை முடித்துக்கொண்டு தில்லைவாழ் அந்தணர்களுக்குரிய பல விருதுகளுடன் ஒரு பல்லக்கில் ஏறி வீட்டிற்குச் சென்று கொண்டிருந்தார். அப்போது அவ்வழியில் நின்று கொண்டிருந்த மறைஞான சம்பந்தர் அவர் காதில் படும்படி "பட்ட கட்டையிற் பகற்குருடு போகுதல் பாரீர்!" என்று உரத்த குரல் எழுப்பி உடல் குலுங்க நகைத்தார். பல்லக்கைப் பட்ட கட்டை என்றும் பகலிலே கைவிளக்கு முதலிய பரிவாரத்தால் விளைந்த ஆடம்பரத்தைப் பகற்குருடு என்றும் மறைஞான சம்பந்தர் கூறியதற்கு வெளிப்படைப் பொருளானுலும், இன்பமில்லாத இவ்வுலகத்தையே இவர் பட்ட கட்டை என்றும், வேதம், ஆகமம் முதலிய கலையறிவுகளெல்லாம் பெற்றும் ஞானம் பெருதவர் என்பதனையே பகற்குருடு என்றும் குறித்தார் என்று டாக்டர் சொ. சிங்காரவேலன் அவர்களின் கருத்து சிங்காரமாகவே விளங்குகிறது. மறைஞானசம்பந்தர் மொழி கேட்ட உமாபதி சிவம் சிவிகையினின்றும் இறங்கி ஆசாரியரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினுர்.

**திரு. ஆர். சுப்பராவ் — திருக்கோவலூர்.**

ஆக இப்படித் தன்னையடைந்த பக்தர்களுக்காகத் தன்னுடைய விருப்பத்துக்கு மட்டும் வசப்பட்டு அவதாரம் செய்யுந்தன்மை இங்குக் கூறப்படுவதனால் விஷ்ணுவுக்குப் பரம புருஷத்வமே இங்கு வால்மீகி முனிவரால் கூறப்பட்டதாகிறதென்று எல்லாம் இனிதே முடிந்தது.

இனி பாலகாண்டத்தில் வால்மீகி முனிவரால் வெளிப்படுத்தப்பட்ட— சிவபிரானைவிட விஷ்ணு மிகவும் உயர்ந்தவரென்னும் விஷயத்தை மூன்று காரணங்கள் காட்டி விளக்குகிறார் 'பங்காச்ச' என்ற ச்லோகத்தினால்.

ச்லோகம் 5 :

பங்காச்ச த்ரைபுராயோதநவிதித மஹாவைபவஸ்யேசசாபஸ்யைவம் ஹுங்காரமாத்ராத் த்ரிணயநஜடதாऽபாதகத்வாச்ச யுத்தே | நிர்ணீதத்வாச்ச தேவை: பசுபதி தநுஷோ ஜ்ரும்பணம் த்ருஷ்டவத்பி: ச்ரேஷ்டத்வேநாப்ஜநாபம் முநிரபி சிவாதுத்தமம் நிச்சிகாய ||

பதவுரை :

த்ரைபுர ஆயோதந=திரிபுராசுரரோடு சிவபெருமான் செய்த போரில், விதித மஹாவைபவஸ்ய=அறியப்பட்ட அதிகமான பெருமையை யுடைய, ஈசசாபஸ்ய = சிவபிரானுடைய வில்லை, பங்காத் ச=முறித்ததனாலும், ஏவம்=இவ்வாறு, யுத்தே= விஷ்ணுவுக்கும் சிவனுக்கும் நடந்த போரில், த்ரிணயநஜடதா ஆபாதகத் வாத் ச=முக்கண்ணனை உணர்ச்சியற்றவராகச் செய்ததனாலும், பசுபதி தநுஷ:=பசுபதியான சிவபிரானது வில்லினுடைய, ஜ்ரும்பணம்=முறிதலை, த்ருஷ்டவத்பி: = பார்த்த, தேவை:=தேவர்களால், ச்ரேஷ்டத்வேந=மிகவுயர்ந்தவராக, நிர்ணீதத்வாத் ச=நிச்சயிக்கப்பட்டதனாலும், முநிரபி=வால்மீகி முனிவரும், அப்ஜநாபம் = தாமரையுந்தியோனாகிய விஷ்ணுவை, சிவாத் உத்தமம்=சிவபிரானைவிட உத்தமராக, நிச்சிகாய= நிச்சயித்தார்.

விசேடவுரை :

சிவபிரானைவிட விஷ்ணு உயர்ந்தவரென்பதற்கு இந்த ச்லோகத்தில் காட்டப்பட்ட மூன்று காரணங்களில் முதலாவது — திரிபுராசுரவதத்தினால் உலகப் பிரசித்தமான பெருமையையுடையதான ருத்திரனது வில்லை முறித்ததனால் - என்பதாகும். திரிபுராசுரர்களை வதம் செய்த சிவபிரானுடைய தநுஸ்ஸை உடைத்தனனென்பது தேர்ந்த காரணமாகும்.

இது-பாலகாண்டம் அறுபத்தேழாம் ஸர்க்கத்தில் 'ரகுநந்தனனாகிய இராமபிரான் விச்வாமித்திரமுனிவர் கூறியதைக் கேட்டு அச்சிவவில்லை நடுவில் பிடித்தார். பல்லாயிர மக்கள் பார்த்துக் கொண்டிருக்க, தருமத்தில் மனம் ஊன்றப் பெற்றவரும் மனிதர் தலைவரும் பெரும் புகழுடையவருமான அப்பெருமான் அவ்வில்லை நாணேற்றி வளைத்தார். அதனை நடுவில் உடைத்தார்' (15, 16) என்ற விடத்தில் கூறப்பட்டது.

இராமன் முறித்த இவ்வில் சிவனுடையது தானென்பது 'முன்பு தக்ஷயாகத்தை நாசம் செய்த சமயத்தில் பராக்கிரமம் மிக்க சிவபெருமான் வில்லை வளைத்து 'தேவர்காள், எதனால் யாகத்தில் ஹவிஸ்ஸின் பகுதியை விரும்பிய எனக்கு அதைத் தராமலிருந்தீர்களோ அதனால், பூஜிக்கத் தக்க உங்கள் தலைகளை இவ்வில்லால் அறுத்து விடுகிறேன்' என்று தேவர்களைக் குறித்துக் கோபத்தோடு அநாயாஸமாகக் கூறினர். அதனால் துயரடைந்த தேவர் அனைவரும் தேவேசனாகிய சிவபிரானை வணங்கியும் வேண்டியும் அக்கோபம் தணியும்படிச் செய்தனர். அது காரணமாக அவர் தேவர்களிடம் அன்புண்டாகப் பெற்றார். பிறகு அவர் அவ்வில்லை மகாத்மாக்களான அத்தேவர்களுக்குக் கொடுத்தார். பெருமை படைத்த விசுவாமித்திர முனிவரே, மகாத்மாவாய்த் தேவதேவனாகிய சிவபிரானது இவ்வுயர்ந்த வில் எங்கள் முன்னோனான தேவராதனிடம் அத்தேவர்களால் ந்யாஸமாக (அடைக்கலப் பொருளாக) வைக்கப்பட்டது' என்று பாலகாண்டம் அறுபத்தாறும் ஸர்க்கம் 10-13 ச்லோகங்களில் இவ்வில் தமது குலத்திற்கு வந்து சேர்ந்தபடியைப் பற்றி வருணிக்கும் ஜநகருடைய வாக்கியங்களால் மிகவும் ஸ்பஷ்டமாயிற்று.

மேல் எழுபத்தைந்தாம் ஸர்க்கத்தில் 'மிகவுயர்ந்தவையும் உலகில் மிகப் பிரசித்தமானவையும் உறுதியானவையும் பகைவரை யழிப்பதில் ஆற்றலுடையவையும் விற்களில் முதல் தரமானவையுமான இவ்விரண்டு விற்களும் தேவதச்சனான விச்வகருமனால் மிக முயன்று செய்யப்பட்டன. இவற்றில் ஒன்றினைத் தேவர்கள் திரிபுராசுரரோடு போர் புரிய விரும்பிய முக்கண்ணனுக்குத் தந்தனர். ககுத்ஸ்தவம்சத்தில் தோன்றிய மனிதர் தலைவனே இராமபிரானே திரிபுராசுரரை அழித்த அச்சிவவில் தான் இப்போது உன்னால் முறிக்கப்பட்டது' (11, 12) என்று பரசுராமராலும் இவ்விஷயம் ஸ்பஷ்டமாக்கப்பட்டது. இராமபிரானால் முறிக்கப்பட்ட வில் திரிபுராசுரவதம் முதலியவற்றைச் செய்யும் ஆற்றல் படைத்ததென்னும் விஷயம் பரசுராமர் வாக்கியத்திலுள்ள 'திரிபுராசுரரை அழித்த' என்ற பகுதியினால் விளக்கப்பட்டது.

இவ்விடத்தில் சிவதநுஸ்ஸை முறித்த செயல் இராமனுக்குள்ளதாகவே கூறப்பட்டிருந்தாலும், விஷ்ணுவே இராமனாக அவதரித்தாரென்று முன்னமே முதலிக்கப்பட்டுள்ளதனால், இக்காரணம் விஷ்ணுவினிடம் சிவனைவிட உயர்த்தியைச் சாதிக்க வல்லதென்பது சாலப் பொருந்தும்.

(தொடரும்)

# ஆகமத்தில் ஸ்நபனம் - உதக திரவியம்

உயிர்கள் தங்களது தேவைகளைப் பூர்த்தி செய்ய இறைவனை வழிபடும் நிலையினைப் பல்வேறாக வேதாகமங்கள் எடுத்தியம்புகின்றன. அவை ஜபம், அர்ச்சனை, ஸ்நபனம், ஹோமம் முதலான யாகாதி காரியங்களாகும். ஸ்நபனம் என்பது யோக நிலையில் இறைவனை ஆவாகனம் செய்து யாகத் தீ வளர்த்து மந்திரம் தந்திரம் முதலியவைகளைப் பிரயோகித்து வழிபடல். மற்றையதை விடச் சிறந்ததாகும் இது. இக் கட்டுரையில் ஸ்நபன வகைகளையும் உதக திரவிய வகைகளையும் காண்போம்.

**ஸ்நபன வகைகள் :**

1. சப்த கலச ஸ்நபனம்.
2. நவகலச ஸ்நபனம்.
3. ஏகாதச ஸ்நபனம்.
4. பஞ்ச விம்சதி கலச ஸ்நபனம்.
5. ஏகோந பஞ்சாசத் கலச ஸ்நபனம்.
6. நவோத்தர சதகலச ஸ்நபனம்.
7. நவோத்தர துவி சத கலச ஸ்நபனம்.
8. நவோத்தர சதுஸ் சதகலச ஸ்நபனம்.
9. நவோத்தர சகஸ்ர கலச ஸ்நபனம்.
10. சகஸ்ர சங்க மகா ஸ்நபனம்.

கலசங்கள் மண்ணினாலும், செம்பினாலும், தங்கத்தினாலும், வெள்ளியினாலும் இருக்கலாம். இவைகளுள் மண் கலசத்தினும் செப்புக் கலசம் ஆயிரம் மடங்கு விசேடமானது. செப்புக்கலசத்தினும் வெள்ளிக் கலசம் ஆயிரம் மடங்கு விசேடமானது. இப்படியே ஒன்றுக்கொன்று மேலானதாகக் கூறி கடைசியாக சங்கினாலும், காண்டாமிருக கொம்பினாலும் அபிஷேகம் செய்வது விசேஷம் என்று கூறி, சங்கினால் அபிஷேகம் செய்வது அதிவிசேஷிக்கப்படுகிறது.

இத்தகைய ஸ்நபனங்கள் செய்வதற்கு அங்கமாக முதலில் அனுக்ஞை, விக்நேஸ்வர பூஜை, வாஸ்து சாந்தி, மிருத்சங்கிரகணம், அங்குரார்ப்பணம், ரட்சாபந்தனம் முதலியவற்றை உரியமுறைப்படி நிகழ்த்துதல் வேண்டும்.

உத்தமம், மத்திமம் அதமம் என வகுத்துக் கூறப்பட்ட யாகசாலைகளில் அந்தந்த ஸ்நபனத்திற்கு ஏற்பயாக சாலை,வேதிகை குண்டம் முதலியன முதலில் அமைத்துக் கொள்ளல் வேண்டும். மத்தியில் அதற்குரிய முறைப்படி சூத்திரங்களையிட்டுப் பதங்களை அமைத்துக் கொள்ள வேண்டும்.

**உதக திரவியங்கள் விளக்கம் :**

24 மேடைகள் அமைத்து பிரதான கலசங்களான 24-னை பூசிக்க வேண்டிய உதகங்கள் பற்றிய விபரங்களைக் கீழே காணலாம்.

1. ரத்னோதகம் :

வஜ்ரம், மாணிக்கம், முத்து, இந்திரநீலம், பத்மராகம், பவளம், புஷ்பராகம், ஸ்படிகம், வைடூரியம் ஆகியன கலந்த ஜலமாகும்

2. லோகதகம் :

பொன், வெள்ளி, செம்பு, பித்தளை, வெண்கலம், தரா, ஈயம், இரும்பு ஆகிய எட்டும் கலந்த ஜலமாகும்.

3. தாதூதகம் :

பச்சை, பொன்னரிதாரம், நற்செங்கற்பொடி, மனோசிலை, கோரோசனை இவை கலந்த ஜலமாகும்.

4. பூஜோதகம் :

சாமை, தினை, எள், அறுவதாம், குருவைசம்பா, யவநெல், செந்நெல், கடுகு இவை கலந்த ஜலமாகும்.

5. சுத்தோதகம் :

முத்தகாசு, கச்சோலம், சமுத்திராப்பாச்சை, வெண்ணெய், குங்குமப்பூ இவை கலந்த தீர்த்தமாம்.

6. மிருதூதகம் :

சமுத்திரமண், மலைமண், ஆனைக் கோட்டுமண், இடபக்கோட்டு மண், புண்ணிய ஸ்தல மண், ஆற்றுமண், தர்ப்பையடிமண், நண்டளை மண் இவை கலந்த ஜலமாம்.

7. மார்ஜன உதகம் :

விஷ்ணு கிராந்தி மஞ்சள், நெருஞ்சி, ஆனைவணங்கி, சீதேவியார், செங்கழுநீர், வாகையிலை, கருநெய்தல் இவை ஊறிய ஜலமாம்.

திரு. எஸ். நாராயணசுவாமி
M.A., B.Ed.,
(காப்பாளர்; சரஸ்வதி மஹால் ஆய்வு மையம் திருவாவடுதுறை.)

8. பரிமார்ஜன உதகம் :

பிள்ளைப்பூண்டு, வெண்கடுகு, அறுகு, தர்ப்பை, தாமரைப்பூ இவை கலந்த ஜலமாகும்.

9. பத்திரோதகம் :

தமாலபத்திரம், வன்னியிலை, துளசி, கருசலாங்கண்ணி, வில்வம், நாயுருவி இவை ஊறிய ஜலமாம்.

10. புஷ்போதகம் :

செண்பகப்பூ, நிலத்தாமரை, செங்கழுநீர், புன்னைப்பூ, மகிழம்பூ, நாகப்பூ, பாதிரிப்பூ, பட்டிப்பூ, வெள்ளெருக்கம்பூ, நந்தியா வட்டைப்பூ, மல்லிகைப்பூ இவை ஊறிய ஜலமாம்.

11. மான்யோதகம் :

செங்கழுநீர், அகில், சந்தனம், முத்தகாசு, கற்பூரம், வெட்டிவேர், குங்குமப்பூ முதலியன கலந்த ஜல மாகும்.

12. அஸ்திரோதகம் :

சூலம், வச்சிரம், கத்தி, துறட்டி, கோடறி, பரிசை, பாசம் முதலிய ஆயுதங்கள் இருந்த ஜலமாம்.

13. பீலோதகம் :

தேங்காய்த்துருவல், மாம்பழம், மாதுளம்பழம், வாழைப்பழம், எலுமிச்சைப்பழம், பலாப்பழம் இவை ஊறிய ஜலமாம்.

14. காஷாயோதகம் :

நாவல், பாதிரி, அரசு, அத்தி, கேசில், இத்தி, பலாசு, ஆல் இவற்றின் பட்டை ஊறின ஜலமாம்.

15. ஆர்க்கோதகம் :

தேன்மெழுகு, குறிஞ்சித்தேன் மெழுகு, பெருந்தேன்மெழுகு, கிருஷ்ணுபிரம் ஆகியன ஊறிய ஜல மாகும்.

16. காந்தோதகம் :

ஆனைக்கெந்தகம், சூர்யகாந்தம், சந்திரகாந்தம், அயக்காந்தம், ஊசிக் காந்தம், பொன்காந்தம் இவைகளுடன் கூடிய ஜலமாகும்.

17. மூலோதகம் :

சந்தனவேர், நச்சுப்புல்வேர், வெட்டிவேர், கீழ்க்காய்நெல்லிவேர், தாமரைவளையம் இவை ஊறிய ஜல மாகும்.

18. சாந்தியுதகம் :

பஞ்சகவ்வியம், குச்சலப்பேட்டை, கூர்ச்சப்பேடை, குருந்து, தர்ப்பை, மயிற்கொன்றை, நாயுருவி, கையாந்தரை, கோரோசனை முதலிய ஊறிய ஜலமாகும்.

19. புஷ்கரோதகம் :

வெள்ளலோத்தி, வெவ்வலோத்தி, கிராம்பு இவை ஊறிய ஜலமாகும். 20. கோதுமா, 21. குளச்செந்நெல், 22. சந்தனுதித்தைலம், 23. நெல்லி முள்ளி, 24. மஞ்சள்மா முதலியன தனித்தனியே கலந்து ஊறின ஜல மாம்.

மேற்சொன்ன ஜலங்களைத் தனித் தனியே ஸ்நபனம் வைத்து அவை களுக்கு பிரத்யேகமான பிரமாண சுலோகங்கள் மற்றும் அர்ச்சனை களைச் செய்து சுபமான நேரத்தில் அபிஷேகித்தால் நன்மை பயக்கும்.

இம்முறைகள் தகுந்த ஆச்சாரியர் களைக் கொண்டு நேரிடையாக பார்த்து அறிந்து செயல்படுவது நன்ருகும்.

மேற்சொன்ன உதக திரவியங்கள் எல்லாம் மருந்துப் பொருட்கள். இவற்றை நம் முன்னேர்கள் தெய்வீக காரியத்தில் பயன்படுத்தி ஆன்மீக வழியினை இன்னும் வளமடையச் செய்தனர் என்பது ஓர் ஒப்பற்ற செயலாகும் என்பதே கருத்து.


அன்னை ஸ்ரீ சக்தியின் அருளும், ஆசியும் பெறுங்கள் !

ஓம் சக்தி ! அம்மே ! நாராயணா !!



அருள்சக்தியின் பிம்பங்களாக விளங்கும ஸ்ரீமூகாம்பிகை அம்மன அருளும், சோட்டாணிக் கரையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ நாராயணி அம்மையின் அனுகிரகமும் பெற்ற



கேரளத்தில் புண்ணிய நதியாம் பாரத ஆற்றின் கரையில் குடிகொண்டிருக்கும் அடியவர் ஸ்ரீநாராயணி உபாசகர்

ஸ்ரீலஸ்ரீ வெங்கடபதி சுவாமிகள்

உங்கள் பிரச்சனைகள் தீர வழி கூறுகிருர்.

உங்களது அனைத்துக் குடும்பப் பிரச்சனைகளும் தீர்ந்து, நினைத்த காரியம் கைகூடி, குடும்பத்தில் சகல செளபாக்கியங்களும், ஐஸ்வர்யமும் உண்டாகவும், தொழில் வியாபார மந்தநிலை அகன்று லெட்சுமி கடாட்சம் ஏற்படவும், திருமணத் தடை நீங்கி மணவாழ்வு அமையவும், குழந்தைச் செல்வம் இல்லாதோருக்கு புத்திரபாக்கியம் ஏற்பட்டு சுபிட்சமடையவும், துர்தேவதைகளின் தொல்லை நீங்கி குடும்பத்தில் தெய்வகடாட்சம் நிலவவும் சுவாமிகள் வழி கூறுகிருர். இதற்கு ஜாதகமோ, கைரேகையோ தேவையில்லை. பெயர், வயது, என்ன பிரச்சனை என்பதை எழுதி சுய முகவரியிட்ட 70 பைசா கவருடன் அனுப்பினல், சுவாமிகளின் நல்வாக்கும் பிரசாதமும் அனுப்பி வைக்கப்படும். அம்மனுக்குக் காணிக்கை பக்தர்களின் விருப்பம். முகவரியை மட்டும் ஆங்கிலத்தில் குறிப்பிடவும்.

SREE VENKATAPATHY SWAMIGAL,

SREE NARAYANI ASHRAM, TRIKANAPURAM - 679573, KUTTIPURAM STG, KERALA. (INDIA)

# திருமலையில் வருடப்பிறப்பு

காலத்தைக் கணிக்கும் முறையில் தான் எத்தனை வகைகள்! சூரியனின் இயக்கத்தை அடிப்படையாகக் கொண்டது சௌரமானம் அல்லது சூரிய அளவு முறை; மேஷ ராசியின் தொடக்கத்திலிருந்து மீண்டும் அடுத்து அவ்விடத்திற்கே வருவதற்குச் சூரியன் எடுத்துக்கொள்ளும் காலம் ஒரு கதிரவன் ஆண்டு. சந்திரனின் கதியை வைத்துக் கணக்கிடும் முறை சாந்திரமானம் ஆகும்; ஓர் அமாவாசையிலிருந்து அடுத்த அமாவாசை வரையுள்ள கால அளவு ஒரு சாந்திரமான மாதம். பிருஹஸ்பதி அல்லது வியாழன் மேற்கொள்ளும் இயக்கத்தை ஆதாரமாக உடையது பார்ஹஸ்பத்யமானம்; வியாழன் ஒரு ராசியில் இருக்கும் காலம் ஓர் ஆண்டு எனக் கொள்ளப்படுகிறது.

பொதுவாக, தென்னிந்தியாவில் ஆந்திரம், கர்நாடகம் ஆகியவற்றில் சாந்திரமானமும், தமிழ்நாடு, கேரளம் ஆகியவற்றில் சௌரமானமும் நடைமுறையில் உள்ளன. எந்த முறையாயிருந்தாலும், ஆண்டின் முதல் நாள் — வருடப் பிறப்பு — ஒரு புனித நாளாகவே கருதப் பெற்று, ஒரு பண்டிகையாகவே கொண்டாடப்பட்டு வருகிறது. திருக்கோயில்களிலும் வருடப் பிறப்பு நாள் ஓர் உற்சவ தினமாகவே சிறப்பு நிகழ்ச்சிகளுடன் கொண்டாடப்பட்டு வருகிறது.

திருமலையில் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமுடையான் திருக்கோவிலில் மிகப் பழங்காலத்திலிருந்தே கொண்டாடப்பட்டு வரும் முக்கியமான உற்சவங்களுள் ஒன்று ஆண்டின் தொடக்க நாளன்று மிகுந்த வைபவத்துடன் நடைபெறும் 'வருடப் பிறப்பு உற்சவமாகும்.

இன்று போக ஸ்ரீநிவாஸர் என்றழைக்கப்பெறும் மணவாளப் பெருமாளின் வெள்ளி விக்கிரஹத்தை சிறப்பு அணிகலன்களோடுகூட வழங்கிய பல்லவ அரசி சாமவை காலத்திலிருந்து-கி. பி. ஏழாம் நூற்றுண்டிலிருந்து பதினைந்தாம் நூற்றுண்டு வரை-சூரியக் காலக் கணிப்பு முறையே வழக்கத்தில் இருந்து வந்ததாகத் தெரிகின்றது. சித்திரை விஷு, துலா விஷு, மகர சங்கிரமணமான தைமாதப் பிறப்பு, தட்சிணுயனம் முதலிய நாட்களில் சிறப்பு உற்சவங்கள் நடைபெற்றன.

எனினும், கி. பி. 1491இல் ஆட்சி புரிந்த ஸ்ரீமன் மகாமண்டலேசுவர பைச்சராஜா திம்மய்யதேவ மகாராஜாவினுல் சாந்திரமான முறையின் வருடப் பிறப்பான 'உகாதி'ப் பண்டிகையும் தீபாவளிப் பண்டிகையும் சிறப்பாக நடைபெறுவதற்கான ஏற்பாடுகள் முதன்முதலாகச் செய்யப் பெற்றன. இவ்விழாக்கள் நடைமுறைக்கு வந்த பிறகு, அதுகாறும் சிறப்புடன் நடைபெற்று வந்த சூரிய முறை வருடப் பிறப்பு— சித்திரை விஷு — முதலிய பண்டிகைகள் சில வழக்கொழிந்து போனதாகக் கருதப்படுகின்றது.

(ஆட்சியில் இருப்பவர்கள் அனுசரிக்கும் காலக் கணிப்பு முறையை ஒட்டியே வருடப் பிறப்புப் பண்டிகை அமைகின்றது — ஆங்கிலேயர் ஆட்சிக்கு வந்த பின் ஜனவரி முதல் தேதி கொண்டாடப் பெற்று வருவதைப் போல).

இன்று திருவேங்கடவன் திருக்கோவிலின் முக்கியமான ஆஸ்தான உற்சவங்களுள் ஒன்று 'உகாதி'

ஆண்டின் முக்கியமான ஆஸ்தான உற்சவங்களுக்கு முதல் நாள் 'கோவில் ஆழ்வார் திருமஞ்சனம்' நடைபெறும்; அதுபோது கோவிலின் உட்புறம் முழுதும் முறைப்படி துப்புரவு செய்யப்படுகின்றது.

'உகாதி' நாளன்று திருவேங்கடவனுக்குக் காலைத் திருவாராதனம் முடிந்தவுடன், உற்சவமூர்த்தியான மலையப்பஸ்வாமியையும், ஸ்ரீ தேவி, பூதேவி நாச்சியரையும், 'பங்காரு வாகிலி' எனப்படும் பொற்கதவத்திற்கு முன்பாக அமைந்துள்ள திருமாமணி மண்டபத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளச் செய்வர். அருகில் மற்றொரு பீடத்தில் ஸ்ரீ சேனுதிபதி தெற்கு நோக்கி எழுந்தருளியிருப்பர். உற்சவமூர்த்திகளுக்கு விலையுயர்ந்த மணிகளினுலான

---

திரு. அ. நடராஜன் — திருப்பதி.

---

ஆபரணங்களினுலும் மதிப்புமிகு பட்டுத் துகில்களினுலும் நறுமணம் கமழும் மலர்மாலைகளினுலும் நேர்த்தியாக அலங்காரம் செய்யப்படும்.

பின்னர், ஸ்ரீ ஸ்வாமி சந்நிதியில் மத்தியானப் பூஜை தொடங்கும். நைவேத்தியத்திற்கெனத் தினப்படி பிரசாதம் அல்லாது, விசேஷப் பிரசாதங்கள் மற்றும் ஆஸ்தானப் பிரசாதங்கள் ஆகியவற்றைத் தயாரித்து, பணியாரப் பாத்திரங்களைப் பரிசாரகர்கள் தலையின் மீது வைத்துக்கொண்டு, வெண்குடை முதலான

## திருமலையில்
## தி. தி. தேவஸ்தான
# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| காட்டேஜ் விவரம் | | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|---|
| டி. பி. சி. | | ரூ. 25/- ரூ. 15/- ரூ. 10/- |
| டி.பி.சி. 3வது வரிசை (ஹிட்டர் இல்லாதது) | | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | பெரியன | ரூ. 40/- |
| ,, ,, | சிறியன | ரூ. 20/- |
| ஹில் வ்யூகாட் டேஜ் | | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ் | | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | | ரூ. 20/- |
| திருமணக்கூடம் (3-வது சத்திரம்) | | ரூ. 15/- |
| சிறப்பமைப்பு கொண்ட காட்டேஜ்கள் | | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | | ரூ. 50/- |

**எஸ். வி. விருந்தினர் விடுதி**

| | |
|---|---|
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடி பவன் | ரூ. 100/- |

**திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)**

| | |
|---|---|
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண். 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண். 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண். 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண். 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண். 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள்பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி.பி.சி. ஒரு அறைத்தொகுதி | |
| ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

மரியாதைகளுடன் மங்கள வாத்தியம் முழங்க, ஜீயங்கார், ஆச்சாரிய புருஷர்கள், அதிகாரிகள் ஆலயத்தைப் பிரதட்சிணமாக வந்து, திருவேங்கடமுடையான் சந்நிதிக்கும் மலையப்பஸ்வாமியின் சந்நிதிக்கும் வந்து சேருவர். உடனே ஸ்ரீஸ்வாமிகளுக்கு நிவேதனம் செய்யப்படும்.

அதன் பின்னர், ஸ்ரீ ஸ்வாமிகளுக்கான வெள்ளிப் பாத்திரங்களில் வைக்கப்பட்டிருக்கும் புதிய வஸ்திரங்களை ஜீயங்கார் தமது சிரசின்மீது வைத்துக்கொண்டு, ஆலய மரியாதைகளுடனும் நாதஸ்வர வாத்தியத்துடனும் கோவிலை வலம் வந்து ஸ்ரீ ஸ்வாமியின் சந்நிதியில் சமர்ப்பிப்பார். அர்ச்சகர்கள் அப்புதிய ஆடைகளை ஸ்ரீ ஸ்வாமிக்கு உடுத்துவர். பிறகு ஸ்ரீ ஸ்வாமிக்கு ஆரத்தி எடுத்து, கோஷ்டியினருக்கு தீர்த்த வினியோகம் நடைபெறும். எஞ்சியுள்ள வஸ்திரங்களை ஜீயங்கார் தமது தலையின் மீது வைத்துக்கொண்டு ஸ்ரீ மலையப்ப ஸ்வாமி சந்நிதிக்கு வந்து சமர்ப்பிப்பார். பின்னர், அர்ச்சகர்களுக்கு மரியாதை நடந்து ஸ்ரீ ஸ்வாமிக்கு அட்சதை சமர்ப்பணம் நிகழும். உடனே கோயில் சித்தாந்தி புது வருஷப் பஞ்சாங்க விவரங்களை வாசிப்பார்;. அவருக்கு மரியாதை செய்யப்படும். அதற்குப் பிறகு ஸ்ரீ ஸ்வாமிக்குத் கொலு எனப்படும் திருவோலக்கம், 'மாத்ராதானம்' எனப்படும் தாம்பூலம், தட்சிணை, பழங்கள் ஆகியவற்றுடன் கூடிய அரிசி தானம் நடைபெறும். உடனே ஸ்ரீ ஸ்வாமிக்கு ஆரத்தி எடுத்த பின்னர், பிரசாதங்களும் பணியாரங்களும் கோஷ்டியினருக்குக் கிரமப்படி வினியோகிக்கப்படும்.

ஒழுங்கு முறையுடன் மனத்தைக் கவரும் வகையில் நடத்தப்பெறும் இந்த உகாதி உற்சவம் காணற்கரியதொரு பெரும் பேறுகும்!



(4-ம் பக்கத் தொடர்ச்சி)

செய்வித்து, அப்படகு மூழ்கும் வரை அப்படகில் பொன், பவளம், மாணிக்கம், முத்து என பல ஏற்றி, அவற்றை அக்கோயிலுக்கு அளித்து தன் பதவியைப் பரிசுத்தமாக்கிக் கொண்டான். அவனுக்குப் பிறகு நாயக்கர்கள் காலத்தில் கோயில் மேலும் விரிவடைந்தது. பல கோபுரங்கள் எழும்பின. அக்கட்டத்தில் இந்தியாவிற்கு வந்த பிரஞ்சுக்காரர்களின் ஆதிக்கம் இப்பகுதியில் நுழைந்த போது, பல ஆக்கப் பூர்வமான கோயில் கட்டுமானப் பணிகள் தடைபட்டன.

பிரிட்டிஷாரின் தாக்குதலுக்குப் பயந்து, பிரெஞ்சுக்காரர்களும் சந்தா சாகேப் கூட்டத்தாரும் இக்கோயிலைத் தஞ்சமாகக் கொண்டு திருவரங்கத்தைக் கைப்பற்றிக் கொண்டனர். இவையாவும் சரித்திரம் தரும் தகவலாகும். அப்போது தடைப்பட்ட பணிகளில் ஒன்றுதான், சுமார் 10 ஆண்டுகளுக்கு முன்பு வரை திருவரங்கம் செல்லும் ஒவ்வொருவரின் கண்ணிலும் பட்ட, கோயில் தெற்கு முகப்பில் இருந்த 'மொட்டை கோபுரம்'

இம்மொட்டை கோபுரம் சுமார் 12 ஆண்டுகளுக்குமுன் திருவரங்கத்திற்கு வருகை புரிந்திருந்த காஞ்சி காமகோடி பீடத்தின் சுவாமிகளின் உள்ளத்தை உறுத்தியது. இம் மொட்டை கோபுரம் முடிவு பெற்றிருந்தால் கோபுரம் எப்படி இருக்கும் என்று தன் ஆதங்கத்தை அம்பலப்படுத்தினார். அவ் ஆதங்கத்திற்கு ஆதரவு தந்து, அவர் எண்ணத்திற்கு வடிவம் கொடுக்கத் துணிந்தார், புரவலர்களின் வரிசையில் தனக்கும் ஓர் இடம் பிடித்துக் கொண்ட அஹோபில மடத்து ஜீயர் ஸ்ரீமத் அழகிய சிங்கர். தள்ளாத வயதிலும் தளராத நம்பிக்கையுடன், தமிழக அரசின் உதவியுடன் செயலில் வரிந்து கட்டிக் கொண்டு இன்றைய இந்து இளைஞர் கூட்டத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கினார்.

அரங்கனுக்கு எடுக்கவிருக்கும் கோபுரம் 13 நிலையங்களுடன் அமைய விரும்பினார். கோபுரத்தில் உச்சியில் இருந்துகொண்டு, ஸ்ரீவில்லிபுத்தூர்வாழ் அரங்கனின் காதலியான ஆண்டாளைக் காணத் துடித்தார். மளமளவென்று காரியங்கள் தொடர்ந்தன. 1978-ம் ஆண்டு ரூ 55 இலட்சம் செலவில் தெற்குக் கோபுரத் திட்டம் தீட்டப்பட்டது. 1979-ம் ஆண்டு, மே மாதம் 20-ம் தேதி திருப்பணி துவங்கியது. திரு. சிவ பிரகாசம் தலைமையில் திருவாளர்கள் கணபதி, ஸ்வேதாரண்யர், சுந்தரர் போன்ற தலைசிறந்த ஸ்தபதிகளின் திருத்தொண்டு ஆரம்பமானது. எழும்ப இருந்த கோபுரத்தின் அடித்தளம் ஆராயப்பட்டது. சுமார் 32 அடிக்கும் கீழாக கருங்கல்லும், சுண்ணும்பும், கெட்டித் தரையும் அமைந்த அஸ்திவாரத்தின் மீது அமைந்த கல்கரத்தின் உறுதி தெளியப்பட்டது. பணி துவங்கியது. தொடர்ந்து 8 ஆண்டுகள் திருப்பணி நடந்தது. இம் மாதம் அப்பணியும் வெற்றியுடன் நிறைவேறியது. அக்கோபுரத்தின் சம்ப்ரோக்ஷணம் 25-ம் தேதி என குறிக்கப்பட்டது.

இத்தகு பெருமைமிகு 13 நிலைகளையும் 13 கலசங்களையும் கொண்ட இத்திருக்கோபுரம் சுமார் 1.30 இலட்சம் டன் எடை கொண்டதாகும். சுமார் ரூ. 1. 60 கோடி செலவில் அமைக்கப்பட்ட இக்கோபுரத்தினைக் கட்ட 12000 டன் எடை சிமெண்ட்டும், 6000 லாரிகள் சுமந்த மணலும், 130 டன் இரும்பும், 200 லாரிகள் சுமந்த கருங்கற்களும், 7. 5 கோடி செங்கற்களும், 8000 லிட்டர் வண்ணக் கலவையும் தேவைப்பட்டன. இக் கோபுரத்தின் சாரம் கட்டவே ரூ. 10 இலட்சம் ஆகியது. கோபுரக் கூலிக்கே பாதி செலவு ஆகியது. இத்தகு பெருமைமிகு இக்கோபுரம் நூற்றுக்கணக்கான உழைப்பாளிகளின் வேர்வையிலும், ஜீயர் சுவாமிகளான ஸ்ரீமத் அழகிய சிங்கரின் கடமை உணர்ச்சியிலும், அவருடைய மடத்தின் நிதி உதவியாலும், ஆந்திர, கர்நாடக, தமிழக முதல்வர்கள், இசையமைப்பாளர் திரு. இளையராஜா போன்ற தனி மனிதர்கள், மற்றும் பல நிறுவனங்களின் நிதி உதவியாலும் இத்திருப்பணி நடந்தேறியது. 236 அடி உயரம் கொண்டு ஆசியாவிலேயே மிகப் பெரியதான இந்த ராஜகோபுரம் அரங்கனின் அருட் திறத்தினையும், ஸ்ரீமத் அழகிய சிங்கரின் தொண்டுள்ளத்தையும், பக்தர்களின் ஆன்மிகத்தாகத்தினையும் எடுத்தியம்பும் ஓர் உன்னதமான சமயக் கருவூலமாகத் திகழும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

(நன்றி : இந்து 'நாளேடு').

*



# செய்திச் சுருக்கம்

**தெப்போற்சவம் :**

திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் வருடாந்திர தெப் போற்சவம் திருமலை புஷ்கரிணியில் 11-3-87 முதல் 15-3-87 வரை 5 நாட்களுக்கு வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. சுமார் 75,000 பக்தர்கள் இந்நிகழ்ச்சியைக் கண்டு களித்தனர். முதல் இரண்டு நாட் களின் போது உண்டி, ஆர்ஜித சேவைகள், மற்றும் பிரஸாதங்கள் விற்பனை மூலமாக கோயிலுக்குக் கிடைத்த வருமானம் ரூ. 19.90 இலட்சமாகும்.

**தள்ளுபடி சலுகை :**

தி.தி. தேவஸ்தானத்தாரால் வெளி யிட்டு விற்கப்படும் சமய நூல் களுக்குக் கீழ்வரும் தள்ளுபடி சலுகை கள் கொடுக்கப்பட்டுள்ளன. ரூ. 1000க்கு மற்றும் அதற்குமேல் மதிப் புள்ள நூல்களை வாங்குவோர்க்கு 30% தள்ளுபடி கொடுக்கப்படும். ரூ. 500 மேல்-ரூ. 1000/-க்குள் வாங் கப்படும் நூல்களுக்கு 25% தள்ளுபடி வழங்கப்படும். ரூ. 100/-க்கு மற்றும் அதற்கு மேல் வாங்கப்படும் நூல் களுக்கு 15% தள்ளுபடி கொடுக்கப் படும். இச்சலுகைகள் இறைவனின் திருவுருவச் சித்திரங்களுக்கும், தனி வகையறுக்களுக்கும் அளிக்கப்படும்.

பொது நிறுவனங்களுக்குத் தவிர மற்றவர்களுக்குக் கடன் வழங்கீடு கிடையாது.

விழாக் காலங்களில், ரூ.2/- மற்றும் அதற்கு மேற்பட்ட மதிப்புள்ள நூல்களை வாங்குவோர்க்கு 30% தள்ளுபடி விற்பனைச் சலுகை உண்டு. இவ்விற்பனைகள், கோயில் மற்றும் சமூக விழாக்களில் தி. தி. தேவஸ் தானத்தாரால் நடத்தப்படும் பொருட்காட்சி மற்றும் விற்பனைக் கூடுகளில் நடைபெறும்.

மேற்கூறிய சலுகைகள், தி. தி. தேவஸ்தானத்தாரால் ஏற்கெனவே மலிவுப்பதிப்பு விலையில் விற்கப்பட்டு வரும் நூல்களுக்கும் கிடைக்கும்.

தேவையான நூல்களுக்கு முன் கூட்டியே அதற்கான தொகையினை வங்கி டி. டி. அல்லது M. O. மூலமாக "The Deputy Executive Officer (Services) T. T. D. Tirupati" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

**மற்றைய செய்திகள் :**

திருப்பதியில் உள்ள ஸ்ரீ தியாக ராஜ சுவாமி கோயில் கட்டிடக் குழு விற்கு, 1987ம் ஆண்டு ஸ்ரீ தியாகராஜ சுவாமி ஆராதனைவிழா நிகழ்ச்சிகளுக் காகக்கென தி. தி. தேவஸ்தானம் ரூ. 30,000 வழங்கியது.

ஃ ஃ ஃ

பீஹார் மாநிலத் தலைநகரமான பாட்னாவில், அம்மாநில அரசு 30 ஆண்டுகளுக்கு குத்தகைக்குத் தர விருக்கும் நிலத்தில், தி. தி. தே. தன் னுடைய திருமணம் மற்றும் தகவலறி விப்பு நிலையம் ஒன்றினைக் கட்ட, ஆந்திர அரசினை அனுமதிக்காக அணுகியுள்ளது.

ஃ ஃ ஃ

ஒரிஸ்ஸா மாநிலத்தில் புவனேஸ் வர் நகரத்தருகே உள்ள நாகபல்லி யில் அம் மாநில அரசு வழங்கிய நிலத் தில், திருமண மண்டபம் ஒன்றினைக் கட்ட, தி. தி. தேவஸ்தானம் அனு மதிக்காக ஆந்திர அரசினை அணுகி யுள்ளது.

தி. தி. தேவஸ்தான திருமண மண் டபங்களில் தி. தி. தே. ஊழியர்கள் மற்றும் அவர்களுடைய பிள்ளைகள், பெண்கள் திருமணம் மற்றும் பிள்ளை களின் உபநயனம் முதலிய நிகழ்ச்சி களை நடத்திக்கொள்வதற்கு, மூன்றில் இரண்டு பங்கு வாடகை செலுத்தி, மேற்படி திருமண மண்டபங்களை பயன்படுத்த, மேலாண்மை சலுகை வழங்கியுள்ளது.

ஃ ஃ ஃ

திருமலையில் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே பதிவு செய்யும் முறை யில் ஒதுக்கப்படும் தங்கு வசதிகள் அளவு குறைவாக இருப்பதால், அது முன்கூட்டியே பதிவு செய்யும் யாத் திரிகர்களுக்கு மிகுந்த இன்னல்களை ஏற்படுத்துவதால், தற்போது, இது வரை முன் பதிவு முறையில் வழங்கப் படாத டி. பி. காட்டேஜ் உட்பகுதி களுக்கும், நாராயண கிரி விருந்தினர் விடுதியின் முதல் மற்றும் இரண் டாவது அறைத்தொகுதிகளிலும் இடவசதி அளிக்க மேலாண்மை முடிவு செய்துள்ளது. அதாவது என். ஜி. சி. மற்றும் எஸ். வி. விருந் தினர் விடுதிகளைத் தவிர மற்றைய இடங்களுக்கு முன் பதிவு செய்தால் இட ஒதுக்கீடு வழங்கப்படும்.

மேலும், இதுவரை திருமலையில் உள்ள இடவசதிகளில் 10 சதவிகிதமே யாத்திரிகர்களுக்கு முன் கூட்டியே பதிவு செய்யும் முறையில் தரப் பட்டு வந்தது. அது தற்போது 25 சதவிகிதமாக உயர்த்தப்பட்டுள்ளது. ஒரு நாள் இட ஒதுக்கீடு என்பது, நேரிடையாக இடவசதி பெற்ற காலத்திலிருந்து 24 மணி நேர மாகும்.

சென்னையிலிருந்து திரு. பி. டி. சம்பத் அவர்கள் நன்கொடையாக வழங்கிய ரூ. 5000க்குப் பெறப்படும் வட்டித் தொகையினைக் கொண்டு அவர் வேணடியபடி திருவாடிப்பூரத் திருநாளன்று, திருச்சானூரில் உள்ள தி. தி. தே. ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயிலில், தாயாருக்குத்திருச்சி, திருமஞ்சனம் மற்றும் கஜவாகனம் ஆகிய நடைபெறும். மேலும் மேற்படி சேவையில் பங்கு பெறும் கிருஹஸ்தர்கள் ரூ. 500/- செலுத்துதல் வேண்டும். கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிப் பதக்கம் அல்லது ஓர் இரவிக்கைத் துண்டு பஹுமானமாக வழங்கப்படும்.

ஃ ஃ ஃ

1986-87 ஆண்டுக்காக, திருப்பதியில் உள்ள ஆந்திர மாநில அரசின் ஸ்ரீ பத்மாவதி மகளிர்ப் பல்கலைக் கழகத்திற்காகத் தன் உபரி நிதியிலிருந்து ரூ. 15 இலட்சம் வழங்க தி. தி. தே. முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

திருப்பதியில் உள்ள எஸ். வி. ஆர். ஆர். அரசு மருத்துவ மனையின் முன்னாள் கண்காணிப்பாளரான டாக்டர். வெங்கட சுவாமி அவர்களின் சேவையை ஏற்றுக்கொள்ளும் வகையில், தி. தி. தே. நவீன சிறப்பு மருத்துவமனையின் சிறப்பு அலுவலராக (பொறுப்பு) அன்னாரை தி.தி.தே. நியமனம் செய்துள்ளது. ★

# ஆசிரியர்க்கு...

உமது பத்திரிகையில் கட்டுரைகள் எழுதி பிரபலம் அடைய வேண்டும் என்ற எண்ணத்தால் பலர் பல விஷயங்களை எழுதுகிறார்கள். அவற்றில் சில பதிக்கப்படுகின்றன. அவ்வாறு பதிப்பிக்கப்பட்ட ஒரு கட்டுரை 'பிஞ்சிலே பழமான பெண் பிள்ளை' என்ற தலைப்பில் திரு. வி. மு. உலகநாதன் என்பவரால் எழுதப்பட்டு ஜனவரி 1987 இதழில் வெளியானது. ஆண்டாளைப் பற்றி எழுத வேண்டும் என்ற அவருடைய ஆர்வத்தை வரவேற்கிறேன். அதே சமயம் அந்தக் கட்டுரையில் ஏற்பட்டிருக்கும் விபரீதங்களை கண்டிக்காமல் இருக்க முடியவில்லை. அதில் "அஞ்சு குடிக்கு ஒரு சந்ததியாய்" என்ற உபதேசரத்தின மாலை பாசுரம் 'அஞ்சிக்குடி' என்ற வெளியிடப்பட்டிருக்கிறது. என்று இதை அச்சுப்பிழை என்று கொள்வதற்கில்லை. 'அஞ்சிக்குடி' என்பது பெருமை வாய்ந்த குடி என்று தெரிகிறது என்று விவரணம் செய்திருப்பதிலிருந்து விபரீதமான ஒரு குடியை புதிதாகத் தோற்றுவித்திருப்பதாக வெளியிடுகிறார். "மணவாள மாமுனிகள்" அஞ்சிக் குடிக்கொரு சந்ததி... என்ற தொடரினைப் பெய்து பாடினார் என்று அவருடைய பாசுரமாக எடுத்துக் காட்டுவது கண்டிக்கப்பட வேண்டிய விஷயம்.

அடுத்ததாக வேதப்பிரான் பட்டர் அருளிச் செய்ததாக எடுத்த வெண்பாவில் இரண்டாவது பாதத்தில் 'வேதம் அனைத்துக்கும் வித்தாகும்...' என்பதற்கு மேலே "கோதை தமிழ்" என்ற பாகம் விடுபட்டுப்போனது ஏனோ தெரியவில்லை.

மூன்றாவதாக ஆண்டாள் அருளிச் செய்தது 'நாச்சியார் திருமொழி'யே தவிர "நாய்ச்சியார்" அல்ல. இந்தச் சொல் வரும் இடம் எல்லாம் "நாய்ச்சி..."யாகவே வெளியிடப்பட்டிருப்பதும் திருத்தப்படவேண்டிய விஷயம். வைஷ்ணவ சம்பிரதாய அடிப்படை தெரியாத ஒருவர் பத்திரிகை ஆசிரியராக இருப்பதால் கட்டுரை ஆசிரியரின் தவறுகள் பதிப்பிலும் வெளியாவதில் வியப்பில்லை. மேலே காட்டப்பட்டத் திருத்தங்களை ஏற்றுக் கொண்டு உமது பததிரிகையில் வெளியிடும்படி பிரார்த்தித்து கடிதத்தைப் பூர்த்தி செய்கிறேன்.

கே. ஏ. பார்த்தசாரதி,
சென்னை-44.



25—3—87 அன்று திருவரங்கம் ஸ்ரீ ரங்கநாதசுவாமி கோயிலின் புதியதாகப் கட்டப்பட்ட தெற்கு ராஜகோபுரத்தின் மீதுள்ள 13 கலசங்களுக்கு கும்பாபிஷேகம் நடைபெற்றபோது.

# அன்னை காமாக்ஷி

பாரத தேசத்தில் உள்ள ஏழு மோக்ஷ புரிகளுள் ஒன்றாய் விளங்கும் காஞ்சியில் கோயில் கொண்டுள்ள அன்னை பராசக்திக்கு ஸ்ரீ காமாக்ஷி என்றும் அவளுடைய திருக்கோயிலுக்கு 'காம கோஷ்டம்' 'காம கோட்டம்' என்றும் பெயர்கள் வழங்கி வருகின்றன.

சிவபெருமான் மீது மன்மதனின் மலர்க் கணைகள் வெற்றிக் கொள்ளும் வாய்ப்பை ஏற்படுத்தும் வகையில் உமாதேவி ஒரு சமயம் சகல ஆலயங்களிலும் உள்ள அம்பிகைகளின் ஜீவ கலைகளையெல்லாம் தன்மீது ஏற்றுக் கொண்டு காம கோட்டத்து கருவறைக்குள் ஒளிந்து கைலாசபதியை காம வேதனைக்கு ஆளாக்கினாள். மன்மதனின் மலர்பாணம் மகாதேவனிடம் வெற்றி கொண்டது. உமா தேவியும் தான் ஏற்றுக் கொண்ட ஜீவ கலைகளை உடனடியாகத் திருப்பி அளித்து விட்டாள். இதன் காரணமாகவே அனைத்து சிவாலய அம்பிகை சன்னதியை 'காம கோஷ்டம்' என்றே அழைக்கிறோம்.

பஞ்சபூத தலங்களில் சிதம்பரம் ஆகாசதலமாக விளங்குவதைப் போலவே பஞ்சபூத சக்தி பீடங்களுள் காஞ்சி ஆகாச பீடமாகத் திகழ்கிறது. சிவத்தலம் என்ற முறையில் இது பிருதுவி (மண்)த்தலமாகவும் துலங்குகிறது. இங்கு அன்னை பராசக்தி காயத்ரி மண்டபம் குகையில் ஆகாச ரூபிணியாக ஆட்சி புரிகிறாள். அன்னையின் ஆகாச சொரூபமே காஞ்சி நகரம் முழுவதும் பரவி உள்ளது. எனவே காஞ்சி தலத்தில் ஸ்பர்ச தோஷம் (உடல் தீண்டுவதால் ஏற்படும் தீட்டு) இல்லை. காசி தலத்திலும் இவ்விதம் ஸ்பர்ச தோஷம் இல்லை என்ற செய்தி பலரும் அறிந்த செய்தியாகும்.

மற்றொரு மகிமை. இத்தலம் ஐம்பத்தியொரு தேவி பீடங்களில் ஸதி தேவியின் ஐகாரரூபமான நாபி விழுந்த தலம். வரலாறு இதுதான்: சிவபெருமானுக்கு அழைப்பு அனுப்பாமலேயே தக்ஷன் (அம்பிகையின தந்தை) புரிந்த யாகத்துக்கு பார்வதி புறப்பட்டாள். சிவபெருமான் விடை அளிக்கவில்லை. பார்வதி வேண்டினாள். "என் தந்தை புரியும் யாகத்துக்கு தங்களை அழைக்கத் தவறியது குற்றமே. ஆயினும் நான் மட்டுமாவது சென்று வருகிறேன். என் தாய் வீடு தானே அது. அழைப்பு அனுப்ப வேண்டிய அவசியமில்லை" என்று பேசி சிவபெருமான் தடுத்தும் புறப்பட்டாள். யாக சாலையை அடைந்ததும் யாரும் (அவளுடன்) பேசவில்லை. உள்ளே விரைந்தாள். தக்ஷன் தடுத்தான். "உனக்கு நான் அழைப்பு அனுப்பவில்லையே? நீ இங்கு வந்தது ஏன்?" என்றான். சினம் பொங்க சிவனையும் இகழ்ந்து வசை மாரி பொழிந்தான். பார்வதி மனம் பதைத்தாள். தந்தையின் சொற்கள் தணலாய் சுட்டன. முடிவு செய்தாள். யாக சாலையில் யோக சக்தியால் உயிரை இழந்தாள். செய்தி அறிந்து சிவனார் வீரபத்திரனை விரைவில் அனுப்பினார். வீரபத்திரன் வந்து சேர்ந்தார். வெஞ்சினம் பொங்கியது. யாகசாலை யுத்த களமாயிற்று. சிவனாரும் அங்குச் சேர்ந்தார். தேவியின் திருஉடலைத் தோளில் சுமந்து ருத்ர நடனம் ஆடினார். ஏழ் உலகமும் நடுங்கிற்று; ஏழ்கடலும் பொங்கிற்று. தீர்வு காண யாருக்கும் திராணியில்லை. அபாயத்தை உணர்ந்த அச்சுதன் உபாயம் கண்டான். தன் சுதர்சன சக்கரத்தை தேவியின் திருமேனியின் மீது ஏவினான். சக்கரம் சூறாவளியாய்ச் சுற்றிச் சுழன்றது. தேவியின்மீது பாய்ந்தது. பார்வதியின் திருமேனி பாரதமெங்கும் சிதறி விழுந்தது. அம்பிகையின் நாபி விழுந்து புவி போற்றும் தலமாக புகழ் கொண்டது காஞ்சி.

ஆகாயம் பூராவும் அன்னையின் சொரூபமாகவே இங்கு விளங்குவதால் காஞ்சி எல்லைக்குள் இருக்கும் சுமார் 50 சிவாலயங்களில் அம்பிகைக்குத் தனிச் சன்னதி இல்லை. சகல சிவாலய, விஷ்ணு ஆலய தெய்வங்களும், நகரின் நடுமத்தியில் அமைந்துள்ள அன்னை காமாக்ஷி ஆலயத்தைச் சுற்றியுள்ள ராஜ வீதிகளிலேயே உலா வருகின்றன. ஆலயங்களின் முக்கிய கோபுர வாயில்கள் அனைத்தும் அன்னையின் ஆலயத்தை நோக்கியவாறே அமைந்துள்ளன. இவ்வகையான பல சிறப்புகளைக் கொண்ட காஞ்சி வாழ் காமாக்ஷி அன்னையை கரங்குவித்து பணிந்து வளம் பெறுவோம், வாழ்வு பெறுவோம். வாருங்கள்.

திரு R. சுப்பாராவ்,
திருக்கோயிலூர்.



தஞ்சைப் பெரியநாயகி

Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba Rao, M.A. and Printed at T. T. D. Press by M. Vijayakumar Reddy Manager, T. T. D. Press, Tirupati-517501.

